# அழகு மயக்கம்

(நாடகங்கள்)



பெ. தூரன்



அமுத நிலையம் லிமிடெட்
தேனாம்பேட்டை :: சென்னை-18

# முன்னுரை

ஒரு பத்துப் பக்கங்களிலே ஒருவனுடைய பிறப்பி லிருந்து இறப்புவரை வாழ்க்கை வரலாறு முழுவதையும் சுருக்கமாக எழுதிவிடலாம். பக்கங்கள் பத்துத்தானே என்று அதைச் சிறுகதை என்று சொல்லலாமா? சொல் லக்கூடாது. சரியான சிறுகதையின் இலக்கணம் அது அல்ல. அதேபோலப் பெரிய நாடகத்தைச் சுருக்கி எழுதி விட்டால், அது ஓரங்க நாடகம் எனப்படும் சிறு நாடக மாகிவிடாது. காட்சிகளைக் குறைத்துவிடலாம்; அங்கம் ஒன்றாக இருக்கும்படி செய்யலாம். இருந்தாலும் அது ஓரங்க நாடகத்தின் இலக்கண அமைதியைப் பெற்று விடாது. சிறுகதைக்கு உள்ளதுபோலவே ஓரங்க நாட கத்திற்கும் தனி இலக்கணம் உண்டு.

ஒன்றுக்கொன்று தொடர்புள்ளதும், ஒன்றுக் கொன்று மாறுபட்டதுமான எத்தனையோ நிகழ்ச்சிகள் சேர்ந்ததுதான் வாழ்க்கை. அந்த நிகழ்ச்சிகளுக்குக் காரணமான மன உணர்ச்சிகளும் எண்ணிலடங்காதவை. வாழ்க்கை நிகழ்ச்சிகளிலும் மனப் போக்கிலும் எத் தனையோ சுவை மிகுந்த கட்டங்கள் இருக்கின்றன. அவற்றில் ஏதாவது ஒரு தனிப்பட்ட அம்சத்தை விளக்கு வதாக, அதைச் சுற்றிப் பின்னியுள்ளதாக ஓரங்க நாடகம் அமையவேண்டும்.

இவ்வாறு ஒரே அம்சத்தைச் சுற்றி நாடகம் அமைவ தால் அதன் அளவும் பொதுவாகச் சுருங்கவேண்டி யிருக் கிறது. அதற்குள்ளே நாடகப் பாத்திரங்கள் ஒவ்வொன் றும் தனி உருவம் பெறவேண்டும் அவர்களின் மனப் பாங்கு வெளியாகவேண்டும். ஆகையால்தான் ஓரங்க

நாடகத்தின் ஒவ்வொரு சொல்லும் முக்கியமானது. ஒவ்வொரு சொல்லும் அக்காரியங்களைச் சாதிக்கப் பயன்படக் கூடியதாக இருக்க வேண்டும்.

பாத்திரங்களின் தன்மை அவர்களுடைய சம்பாஷணை வாயிலாகவும், நடத்தை வாயிலாகவுமே வெளியாக வேண்டும். தானே பேசுதல், நெஞ்சொடு கிளத்தல் என்ற முறையிலே தன்மை வெளியாவது அவ்வளவு சிறப்புடையதல்ல. அவை செயற்கை முறையாகவே அமைந்திருப்பதை நாம் எளிதில் காணலாம். மேலும் ஒரு வகையான தன்மையுடையவன் ஒரு குறிப்பிட்ட சந்தர்ப்பத்திலே எவ்வாறு நடந்துகொள்கிறான் என்பதையும் சுவைபட ஓரங்க நாடகத்தில் எடுத்துக் காட்ட வேண்டும். இவற்றையெல்லாம் அந்தக் குறுகிய எல்லைக்குள்ளே செய்து முடிக்கவேண்டியிருப்பதால்தான் ஓரங்க நாடகத்தில் ஒவ்வொரு சொல்லும் ஆழ்ந்த குறிப்புடையது என்று கூறினேன். சொல் மட்டுமல்ல, பாத்திரங்களின் சிறிய செயல்களும் குறிப்புடையவைதான்.

ஓரங்க நாடகத்தை நடிப்பதிலே நடிகர்கள் பெரிதும் எச்சரிக்கையாக இராவிட்டால் நாடகத்தின் உட்கருத்தைப் பூரணமாக நன்கு வெளிப்படுத்த முடியாது. இரண்டு அல்லது மூன்று மணி நேரத்திற்கு நடைபெறும் பெரிய நாடகத்தில் பாத்திரங்களுக்குத் தமது தனித் தன்மையை உணர்த்த அவகாசம் அதிகமாயிருக்கிறது. அதில் கூடக் குறிப்பிட்ட முக்கிய சந்தர்ப்பங்களை நன்கு பயன் படுத்திக் கொள்ளாவிடில் சுவை கெட்டுப்போகும். ஓரங்க நடகத்திலே இதை இன்னும் நன்றாக மனத்தில் கொண்டிருக்க வேண்டும்.

ஓரங்க நாடகத்தைப் படிக்கும்போதும் இந்த எச்சரிக்கையைக் கடைப் பிடிப்பது அவசியந்தான். மேல்

போக்காகப் படித்துக்கொண்டு போனால் அதன் உட் கருத்து முழுவதையும் அறிந்து சுவைக்க முடியாது. பாத் திரங்களோடு நின்று நிதானமாகப் பழகவேண்டும். அப் பொழுதுதான் அவர்களின் போக்கும் செய்கையும் பளிச் சென்று விளங்கும்.

ஓரங்க நாடகத்தை மேடையேறி நடிக்கும் பழக்கம் நம் நாட்டில் இன்னும் ஏற்படவில்லை என்றுதான் கூற வேண்டும். அவைகள் இன்று ரேடியோவில் இடம் பெற் றிருக்கின்றன ; ஓரளவு வெற்றியும் அடைந்திருக்கின்றன. அங்கே வெற்றி பெறுவது மேடையிலும் வெற்றிபெறும் என்பதில் ஐயமில்லை. ஆனால் மேடையில் நடிக்கப்பெறும் நாடகத்திற்கும், ரேடியோ நாடகத்திற்கும் பல வேறு பாடுகள் உண்டு. ரேடியோ நாடகம் பாத்திரங்களை நேரிற் காணாது அவர்களுடைய குரலையும் பேச்சையும் கேட்கும் முறையிலே அமைந்திருக்கிறது. காலம், இடம் முதலியவற் றின் தோற்றங்களையும் குறிப்பாகப் பேச்சின் மூலம் காண் பிக்கலாமே யொழிய நேரிற் காணச் செய்ய இயலாது. மேடை நாடகம் அவ்வாறல்ல. இவ்வேறுபாடுகளை மனத் தில் கொண்டு, எதிரே தோன்றி நடிப்பதற்கு ஏற்றவாறு ஓரங்க நாடகங்களை அமைத்தால் மேடை மீதும் அவை சிறந்து வெற்றிபெறும். வேஷம், மேடையின் பின்ன ணிக் காட்சி முதலியவைகளும் அவ்வெற்றிக்கு உதவியாக நிற்கும்.

ஆண் பெண் உறவிலே ஆயிரம் ஆயிரம் விதமான மனப் போராட்டங்கள் எழுகின்றன. சந்தர்ப்பம் ஒன்றாக இருந்தாலும் மக்களின் தன்மைக்கேற்ப நடத்தைகள் மாறுபடுகின்றன. அவற்றை யெல்லாம் பல வேறு கோணங்களிலிருந்து மறைமனக் கோளாறுகளோடு பொருத்தி ஆராய்ந்து படம் பிடித்துக் காண்பிப்பது கலைஞனுடைய தொழில். எத்தனை கோணங்களிலிருந்து

படம் பிடித்தாலும் அதற்கு முடிவென்பதே கிடையாது. ஆழ்ந்து முழுக முழுகப் புது உண்மைகளும் தோற்றங்களும் வெளிப்பட்டுக் கொண்டே இருக்கின்றன.

அந்த முயற்சியிலே எழுந்த ஓரங்க நடகங்களே இவை. சிக்கலான சந்தர்ப்பங்களிலே பல பாத்திரங்கள் நடந்து கொண்ட வகையை அவர்களின் தன்மைக்கேற்ப இங்கே சித்திரிக்க முயன்றிருக்கிறேன். சந்தர்ப்பங்கள் எல்லோருடைய கவனத்தையும் கவரக்கூடியவை; பாத்திரங்கள் அவற்றில் நடந்துகொண்ட விதங்களும் எல்லோருடைய கவனத்தையும் கவருமென நம்புகிறேன்.

சென்னை
12—9—'51

பெ. தூரன்

## உள்ளுறை


1. அழகு மயக்கம் ... 1
2. யார் விளையாட்டு? ... 16
3. கணவன் ... 40
4. கங்கணம் ... 58
5. புடமிட்ட பொன் ... 79

# நாடகத்தில் தோன்றுவோர்

1. அழகு மயக்கம் :

முருகன் — வசந்தா
விஜயன்

2. யார் விளையாட்டு :

சரோஜா — கிழவி
மருதாயி — தாயார்
ராமசாமி

3. கணவன் :

தாயம்மாள் — பொன்னு
விஜயா — கமலம்

4. கங்கணம் :

ஜவாஹர்பாய் — பாக்ஜீ
கருணாவதி — ஹுமாயூன்
வாசந்தி — சேனாதிபதி

5. புடமிட்ட பொன் :

லக்ஷ்மி — மோகன்
லலிதா — முனிசாமி
மாதவன்

# அழகு மயக்கம்

## காட்சி ஒன்று

ஒரு சிறிய ஓவியச்சாலை. தீட்டி முடிந்த ஓவியங்களும், அரைகுறையாக வேலை முற்றுப் பெறாத ஓவியங்களும் தாறுமாருக யாதோர் ஒழுங்குமின்றிக் காட்சியளிக்கின்றன. வர்ணங் குழைக்கும் கிண்ணங்களும் தரையிலே சிதறிக் கிடக்கின்றன. ஒரு பக்கத்திலிருந்த நாற்காலியில் அமர்ந்து ஓவியன் முன்னுள்ள மேஜையின்மீது முழங்கையை ஊன்றிக் கன்னத்தில் கை கொடுத்து வீற்றிருக்கிருன். ஆழ்ந்த யோசனையோ விசனமோ அவன் உள்ளத்தில் குடிகொண்டிருக்கிறது. அவனுக்கு முப்பது வயதுகூட இருக்காது என்று தோன்றுகிறது. உடையும் முடியும் கலைந்திருக்கின்றன. வலது புறத்தில் இருந்த கதவைத் திறந்து கொண்டு அவனுடைய நண்பன் ஒருவன் உள்ளே நுழைகிருன். அவனுக்கு இருபத்தைந்து வயதிருக்கும். உள்ளப் பண்பை ஊன்றி அறியும் பார்வை அவனுக்கு இருக்கிறது. அவன் உள்ளே நுழைந்துகொண்டே பேசுகிருன்.

**விஜயன் :** முருகா......முருகா!

**முருகன் :** (மெதுவாகத் திரும்பிப் பார்த்து) யாரது? விஜயனு?

**விஜயன் :** நான் வந்ததுகூடத் தெரியவில்லையா?........ உனது ஓவியச்சாலை ஏன் இப்படி அலங்கோலமாகக் கிடக்கிறது? ஒரு நாள்கூட இப்படி இருந்ததில்லையே?

**முருகன் :** எனது உள்ளம் எவ்வாறு அலங்கோலமாக இருக்கிறதோ அது போலத்தான் என் ஓவியச்சாலையும் இருக்கிறது.

**விஜயன் :** அவளை நினைந்து வருந்திக்கொண்டே இருப்பதால் என்ன பயன்? அவள்தான் உன்னைப் பொருட்படுத்தாமல் போய்விட்டாளே!

முருகன் : (மெதுவாக) அவள் போய்விட்டாள். உன்னை தான்........ஆனால், அவள் மேலுள்ள காதல் அவளுடன் போய்விடவில்லையே!

விஜயன்: கலைஞர்களுக்குக்கூடவா இப்படி மாருத காதல்?

[நாற்காலியில் அமர்கிறான்.]

முருகன் : ஏன், இருக்கக்கூடாதா? கலைஞன்தானே காதலின் முழுச் சக்தியையும் அறிந்தவன்?

விஜயன் : கலைதான் உனக்குக் காதல் தெய்வம் என்பாயே?

முருகன் : ஆமாம், கலைதான் என்னுடைய காதல் தெய்வம். அந்தத் தெய்வத்திற்கு உயிர் வேண்டாமா? அந்த உயிர்தான் அவள். அவள் இல்லாத கலை உயிரில்லாத உடம்புதானே?

[எழுந்து ஜன்னல் பக்கம் பார்க்கிருன்.]

விஜயன் : முருகா, ஏன் இப்படி வீண் பிரமை கொண்டிருக்கிறாய்? புதிதாக வேறோர் இள நங்கையை முன்னால் நிறுத்தி வைத்துக்கொண்டு இன்னுமொரு படம் எழுத ஆரம்பித்தாயானால், இது மறந்து போய்விடுகிறது. இது சகஜந்தானே?

முருகன் : எத்தனை பேருடைய படம் எழுதினாலும் இனி அவளை நான் மறக்கவே மாட்டேன்.

விஜயன் : (சிரித்துக் கொண்டு) இப்படிப் பல தடவை சொல்லிக் கேட்டதுதானே? இன்று புதிதா என்ன?

முருகன் : நீ என்ன வேண்டுமானாலும் சொல்; நான் அவளை மட்டும் மறக்க மாட்டேன்.

விஜயன் : ஓரே இடத்தில் உள்ளத்தைப் பறிகொடுப்பவன் உயர்ந்த கலைஞனாக இருக்கமாட்டான் என்று சொன்னதெல்லாம் காற்றில் போய்விட்டதா?

முருகன்: நான் அப்படித்தான் நினைத்துக்கொண்டிருந்தேன். ஆனால்........

விஜயன்: ஆனால் என்ன? அடுத்த வாரத்திலே அதே சமாதானந்தான் சொல்லப்போகிறாய்.

முருகன்: (திரும்பிப் பார்த்து) விஜயா, உனக்கு என் இயல்பு நன்றாகத் தெரியும் என்று நினைத்துக்கொண்டிருந்தேன். ஆனால், உனக்குக் கொஞ்சம்கூடத் தெரியவில்லை.

விஜயன்: எனக்குத் தெரியாவிட்டால் பாதகம் இல்லை. உனக்குத் தெரிந்திருந்தால் போதும்.

முருகன்: எனக்கு இப்போது நன்றாகத் தெரிகிறது.

விஜயன்: அவள்தான் போய்விட்டாளே; அவளை நினைத்து ஏங்கி என்ன செய்வது?

முருகன்: அவளை நினைத்து ஏங்குவதிலேயே ஓர் இன்பம் இருக்கிறது.

விஜயன்: இந்த ஏக்கத்திற்கெல்லாம் காரணம் நீ அவளிடம் வெற்றி பெறவில்லை என்பதுதான். நீ வெற்றி பெற்றிருந்தால் இன்று அவளைப் பற்றி எண்ணவே மாட்டாய். ஆசையெல்லாம் அப்பொழுதே தணிந்து போயிருக்கும்.

முருகன்: (அருகில் சென்று) இதுதான் என்னைப்பற்றி நீ அறிந்துகொண்டதா?

விஜயன்: நான் உன்னைப்பற்றிக் குறைகூறுவதாக நினைக்கவேண்டாம். நீ வீணாக வருந்துவதைக் காண என்னால் சகிக்க முடியவில்லை. நீ தீட்டிய அழகிய ஓவியங்களைப் பார்த்துக்கூட ஒரு வார்த்தையும் சொல்லாமல் அவள் போய்விட்டாளே! அவளுக்காக ஏன் ஏங்கிக்கொண்டிருக்கிறாய்?

[எழுந்து ஓவியங்களிடையே உலவுகிறான்.]

முருகன்: அவள் பேசாவிட்டால் போகிறது. அவளுடைய அழகு என்னை ஓவியச்சாலையில் தாண்டவமாடும்படி ஒரு சில நாட்களாவது இங்கே வந்திருந்தாளே, அது போதாதா? ஆயுள் முழுவதும் அதையே நினைத்துக் கொண்டிருக்கலாம்.

விஜயன்: முருகா, உன்னிடம் இதைப்பற்றிப் பேசிப் பயன் இல்லை....ம்.... அது இருக்கட்டும்; ஒரு விஷயம் உனக்குச் சொல்லலாமென்று வந்தேன். இன்று சென்னையிலிருந்து மற்றொரு கன்னி வந்திருக்கிறாள் நல்ல அழகி. அவளை வைத்துக்கொண்டு சில படங்கள் வரைந்தால் மிக நன்றாக இருக்கும்.

முருகன்: படம் எழுதுவதற்கு இப்போது எனக்கு மனமே இல்லை.

விஜயன்: அவளும் கல்லூரியில் படித்துக்கொண்டிருக்கிறாளாம். கோடை விடுமுறையாதலால் இங்கே வந்திருக்கிறாள்.

முருகன்: இதென்ன உதகமண்டலமா, அல்லது கொடைக்கானலா?

விஜயன்: இங்கே அவள் தன் அக்காள் வீட்டில் சில நாட்கள் தங்கிவிட்டுப் பிறகு உதகமண்டலம் போகிறாளாம். நல்ல பேச்சுக்காரி.

முருகன்: அதனால்தான் இத்தனை விஷயம் தெரிந்து கொண்டிருக்கிறாய்.

விஜயன்: இன்று மாலையில் நடக்கும் தேநீர் விருந்திற்கு அவளும் வருவாள் என்று நினைக்கிறேன்.

முருகன்: ஓ! இன்று தேநீர் விருந்தா? எனக்கு மறந்தே போய்விட்டது.

விஜயன்: அவள் வந்தால் உனக்கு அறிமுகம் செய்து வைக்கிறேன்.

முருகன் : சகுந்தலையின் படத்திற்கு அவள் பொருத்தமா யிருப்பாளா?

விஜயன் : மிகவும் பொருத்தமாக இருப்பாள். நீ பார்த்த வுடனேயே கண்டு கொள்வாய்.

முருகன் : சரி, பார்க்கலாம். எனக்கு அறிமுகம் செய்துவை.

விஜயன் : ஆகட்டும்; நீ ஐந்து மணிக்குத் தவறாமல் வந்து விடு.

முருகன் : (சற்று ஆவலோடு) நிச்சயம் வருகிறேன்.

[விஜயன் வெளியே போகிறான். முருகன் அவனைப் பார்த்துக் கொண்டு நிற்கிறான்.]

## காட்சி இரண்டு

அதே ஓவியச்சாலை. இப்பொழுது சித்திரங்கள் ஒழுங்காகக் காட்சி அளிக்கின்றன. அழகிய இளமங்கை ஒருத்தி படம் எழுதுவதற்கு ஏற்றவாறு நிற்கிறாள். முருகன் ஓவியம் தீட்டிக் கொண்டிருக்கிறான்.

முருகன் : (தீட்டுவதை நிறுத்தி) ஓவியத்தை இத்துடன் நிறுத்திவிடுகிறேன். இன்று அதிக நேரம் உன்னை நிற்கும்படி செய்து விட்டேன் என்று அஞ்சுகிறேன். காலம் கழிந்ததே எனக்குத் தெரியவில்லை.

வசந்தா : நீங்கள் படம் எழுதுவதானால் எத்தனை நேரமானாலும் சலிப்பில்லாமல் நிற்கலாமே.

முருகன் : ஓவியனுடைய இஷ்டப்படியெல்லாம் உடம்பை வளைத்துக்கொண்டு நிற்பதென்றால் சிரமமில்லையா? அதிலும் சகுந்தலை துஷ்யந்தனைப் பிரிந்து ஏக்கத்தோடு முகம் வாடி நிற்பதுபோல நிற்பதென்றால்?

வசந்தா : எனக்கென்னவோ நீங்கள் ஓவியம் தீட்டும் போது சிரமமே தோன்றுவதில்லை. உங்கள் முகத்தில்

தோன்றி மறையும் அற்புதமான உணர்ச்சிகளை யெல்லாம் சதா கண்டு மகிழ்ந்து கொண்டே இருக்கலா மென்று ஆசை உண்டாகிறது.

[முருகன் அருகில் வருகிறான்.]

முருகன் : வசந்தா, நாளைக்குப் படம் முடிந்துவிடும். காலையில் பத்து மணிக்கே வந்து விட்டால் எழுதி முடித்து முடிப்பு மெருகும் தந்து விடுவேன்.

வசந்தா : அவசியம் பத்து மணிக்கே வருகிறேன். இன்று சினிமாவுக்குப் போகலாமா?

முருகன் : நான் சினிமாவுக்குப் போவதில்லையே! நீ அழைப்பதற்காக வேண்டுமானால் வருகிறேன்.

வசந்தா : எனக்காக வருவதாக இசைந்தீர்களே, அதற்காக நான் சந்தோஷப்படுகிறேன். முருகா, எனக்கு நீங்கள் வரைந்துள்ள ஓவியங்களை யெல்லாம் காட்டுவதாகக் கூறினீர்களே? இன்றாவது காண்பிக்கக் கூடாதா?

முருகன் : நாளைக்குப் பார்க்கலாமே.

வசந்தா : தினமும் இப்படித்தான் சொல்லுகிறீர்கள். நான் பார்ப்பதால் கண் திருஷ்டி பட்டு விடுமா என்ன?

[பக்கத்தில் இருந்த ஆசனத்தில் அமர்கிறாள்.]

முருகன் : உன்னுடைய அழகுக்கு அவை ஈடாகுமா?

வசந்தா : ஆமாம். நான் ரொம்ப அழகுதான். என் அழகைப் புகழ்வதற்கு நீங்கள் 'ஒருவராவது இருப்பதைக் கண்டு எனக்கு மகிழ்ச்சி பொங்குகிறது.

முருகன் : ஏன்? மற்றவர்களுக்குக் கண் இல்லையா என்ன?

வசந்தா : அவர்கள் கண்ணில் கலையென்ற திரை இல்லையே! அதைப் போட்டு மூடிவிட்டால்தான் எதைப் பார்த்தாலும் அழகாகத் தோன்றும்.

முருகன் : இந்தக் கல்லூரிப் பெண்களைப் பேச்சில் வெல்லவே முடியாது.

வசந்தா : நாங்கள் வெறும் வாயாடிகள் என்கிறீர்களோ?

முருகன் : (சிரித்துக்கொண்டே) வசந்தா, சினிமாவுக்கு நேரமாகவில்லையா? பேசிக்கொண்டே மெதுவாக நடக்கலாமே!

[எழுந்து புறப்பட ஆயத்தம் செய்கிறான்.]

வசந்தா : எந்த சினிமாவுக்குப் போகலாம்?

முருகன் : எதற்கு வேண்டுமானாலும் போகலாம். எனக்கு எல்லாம் ஒன்றுதான். நான் ஒன்றைத்தானே எங்கே போனாலும் பார்க்கப் போகிறேன்?

வசந்தா : அதென்னவோ?

முருகன் : நீ சினிமாப் படம் பார்த்துக்கொண்டிரு. நான் உனது வடிவழகைப் பார்த்துக்கொண்டிருக்கிறேன்.

வசந்தா : என்னைத்தான் வாயாடி என்று சொன்னீர்கள். ஆனால், இப்பொழுது....

[சிரிக்கிறாள்]

முருகன் : உனதழகைப் பேச ஒரு வாய் போதாதே!

வசந்தா : புகழ்ச்சியெல்லாம் போதும். வாருங்கள் போகலாம்.

முருகன் : (மேலங்கியை அணிந்து கொண்டே) அன்றைக்கு நடந்த தேநீர் விருந்தை நான் மறக்கவே முடியாது.

வசந்தா : ஏன்? தேநீர் ரொம்ப நன்றாக இருந்ததோ?

முருகன் : அங்கேதானே உன்னைச் சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்தது?

வசந்தா : என்னைச் சந்திக்காதிருந்தால் என்ன முழுகிப் போயிருக்குமோ?

முருகன் : இந்தனை அழகையும் கவினத்தையும் நான் கண்டிருக்க முடியாது.

வசந்தா : பேச்சிலே மயக்குவதற்கு உங்களை விட்டால் கிடைக்காது. சீக்கிரம் புறப்படுங்கள். நேரமாகி விடும்.

[இருவரும் வெளியே செல் கிருர்கள்.]

## காட்சி மூன்று

அதே ஓவியச்சாலை. காலை ஒன்பது மணியிருக்கும். முருகனும் விஜயனும் அமர்ந்து உரையாடிக் கொண்டிருக் கிருர்கள். முருகன் கவர்ச்சியாக உடையணிந்திருக்கிருன். அவன் குரலிலே ஒரு கிளர்ச்சி வெளிப்படுகிறது.

முருகன் : எளிதில் இணங்குவதிலும் ஒரு கவர்ச்சி இருக் கிறது, விஜயா.

விஜயன் : யார் உனக்கு எளிதில் இணங்கப் போகி ருர்கள்?

முருகன் : அவள்தான்—வசந்தா.

விஜயன் : வசந்தாவா?

முருகன் : ஆமாம்; நான் அவளைக் காதலிக்கிறேன்.

விஜயன் : அவளிடம் நீ ஆசை கொண்டிருப்பது எனக் குத் தெரியும்; ஆனல் அவள் உள்ளம் உனக்குத் தெரியுமோ?

முருகன்: ஓ!....அதைப் பற்றிச் சந்தேகமே வேண்டாம்.

விஜயன்: உன்னைக் காதலிப்பதாகக் கூறினாளா?

முருகன்: கூற வேண்டியதே இல்லை. அவள் நடத்தையி லிருந்து கண்டுகொள்ள முடியாதா?

விஜயன்: இந்தக் காலத்துப் பெண்கள் சிலர் இப்படித் தாராளமாகத்தான் பழகுவார்கள். அதைக்கொண்டு.... நீ அவர்களைச் சுலபமாக நினைத்துவிடாதே.

முருகன்: அதெல்லாம் எனக்குத் தெரியும். வசந்தாவை நான் அடையமுடியும் என்பதில் எனக்குச் சந்தேகமே இல்லை.

விஜயன்: பதினைந்து நாட்களுக்கு முன்பு எண்ணி எண்ணி ஏங்கிக் கொண்டிருந்தாயே, அந்தக் காதல் என்னவாயிற்று?

முருகன்: எந்தக் காதல்?

விஜயன்: (இழுத்தாற் போல்) எந்தக் காதலா? அது தான், உனது கலைத் தெய்வத்திற்கு உயிராக வந்தாளே, அவள் மேல் கொண்ட காதல்தான்.

முருகன்: விஜயா, நீ எதையோ பேசிக்கொண் டிருக் கிறாய். என்னிடம் ஒரு வார்த்தைகூடப் பேசாமல் போனாளே, அவளைப் பற்றியா என்னை நினைத்துக் கொண் டிருக்கச் சொல்கிறாய்?

விஜயன்: நான் நினைத்துக் கொண்டிருக்கும்படி சொல்ல வில்லை. நீ தான் அவளை மறக்க முடியாதென்று சொன்னாய்!

முருகன்: உனக்குக் கலையுள்ளத்தைப் பற்றித் தெரியாது.

விஜயன்: கலையுள்ளம் தெரியாதென்றாலும் உன் உள்ளம் எனக்குத் தெரியாதா?

[எழுந்து உலவுகிறான்.]

முருகன்: வசந்தாவைத் தவிர வேறு யாருக்கும் இன்று என் உள்ளத்தில் இடம் இல்லை.

விஜயன்: அவள் நாளைக்கு உதகை புறப்படப் போகிறாள். பிறகு...

முருகன்: யார் சொன்னது? அதெல்லாம் ஒன்றும் இல்லை. அவள் என்னை விட்டுப் போகமாட்டாள்.

விஜயன்: படம் முடிந்துவிட்டதா?

முருகன்: அநேகமாக முடிந்துவிட்டது. இன்று முடிப்பு மெருகு கொடுக்கப் போகிறேன். அவள் சற்று நேரத்தில் இங்கு வருவாள்.

விஜயன்: அப்படியானால் நீ எல்லாம் தயார் செய். நான் போய்வருகிறேன். நாளை மாலையில் சந்திப்போம்.

[வெளியே போகிறான். முருகன் பரபரப்புடன் ஏதோ செய்ய முயல்கிறான்.]

## காட்சி நான்கு

அதே ஓவியச்சாலை. வசந்தா நின்று கொண்டிருக்கிறாள். ஓவியம் தீட்டிக்கொண்டிருந்த முருகன் தூரிகையைக் கிண்ணியில் எறிந்துவிட்டு எழுந்து அவளை நோக்கி மெதுவாக வருகிறான்!

முருகன்: வசந்தா, படம் முடிந்துவிட்டது. பொறுமையோடு எனக்கு அதை எழுத உதவி புரிந்த உனக்கு வந்தனம் கூற வேண்டாமா?

வசந்தா: அந்த மாதிரி உபசாரம் அவசியமானால் கூறுங்கள்.

முருகன்: உபசார வார்த்தை உன்னிடம் வேண்டியதில்லை என்பதை நான் அறிவேன். இருந்தாலும் ஓவியனுடைய கடமை அதுவல்லவா?

வசந்தா : (சிரித்து) வெறும் வார்த்தை சொல்லுவதில் என்ன கஷ்டம் என்கிறீர்களோ? நிறையச் சொல்லுங்கள்.

முருகன்: உன்னிடம் நான் கூறப்போகும் வார்த்தைகள் வெறும் வார்த்தைகள் அல்ல. அவை என் உள்ளத்தி லிருந்து உணர்ச்சியோடு வரும் வார்த்தைகளாக இருக்கும்.

[அருகே நெருங்குகிறான். வசந்தா விரைந்து படத்தின் அருகு செல்கிறாள்.]

வசந்தா : முருகா, மிக நன்றாகப் படம் எழுதியிருக்கிறீர் கள். உங்கள் கலைத் திறமை முழுவதும் இதில் வெளியா கியிருக்கிறது.

முருகன் : நீ வந்திராவிட்டால் நான் இப்படி எழுதியிருக்க முடியாது.

வசந்தா : நான் உங்களுக்கு இப்படி எழுதும்படி சொல் லிக் கொடுத்தேனா என்ன ?

முருகன் : நீ சொல்லிக் கொடுக்கவில்லை. உன் அழகு சொல்லிக் கொடுத்தது.

வசந்தா : அழகுக்கு அந்தத் திறமை உண்டென்று இப் பொழுதுதான் தெரிகிறது.

முருகன். எல்லா அழகுக்கும் அந்தத் திறமை வராது. உன்னுடைய பேரழகுக்கு அது தனித் திறமை.

வசந்தா : வந்தவர்களை எல்லாம் வானளாவப் புகழ்வது தான் உங்கள் வேலை போலிருக்கிறது ?

முருகன் : நான் உண்மையைத்தான் கூறுகிறேன். வசந்தா, உன்னைப்போன்ற அழகியை நான் இதுவரை கண்ட தில்லை; இனிக் காணப்போவதுமில்லை.

வசந்தா : (சிரித்து) பிரம்மாவின் கைத் திறமை என்னோடு முடிவடைந்துவிட்டது; அப்படித்தானே ?

முருகன்: நான் இப்பொழுது உன்னுடன் கேலியாகப் பேச விரும்பவில்லை. என் உள்ளத்தில் உள்ள உணர்ச்சிகளையெல்லாம் எடுத்துக் காட்டவே ஆசைப்படுகிறேன்.

வசந்தா: இன்னும் என்ன சொல்லப் போகிறீர்கள்? என்னைத்தான் அழகு ராணி யென்றே சொல்லிவிட்டீர்களே!

முருகன்: அதோடு இன்னொரு விஷயத்தையும் சொல்ல வேண்டும். நீ அழகு ராணி மட்டுமல்ல; நீ என் இதயராணி.

வசந்தா: (நிதானமாக) இதய ராணியா! நீங்கள் சொல்லுவது புதுமையாக இருக்கிறதே?

முருகன்: உன்னைக் கண்டதும் நான் என் சிந்தையைப் பறிகொடுத்து விட்டேன்.

வசந்தா: (சிரித்தவாறு) கலைஞரின் இயல்பே அதுதான் போல இருக்கிறது!

முருகன்: வசந்தா, நான் உன்னை மனமாரக் காதலிக்கிறேன். உன்னை என் காதல் தெய்வமாக என் உள்ளக் கோயிலில் வைத்திருக்கிறேன்.

வசந்தா: படம் எழுதுவதற்கு உதவியாக உங்கள் எதிரில் நிற்க இசைந்து வந்தவர்களிடமெல்லாம் சிந்தை பறிகொடுப்பது உங்களுக்கு நல்லதல்லவே?

முருகன்: நான் யாரிடமும் இதுவரை காதல் கொண்டதில்லை. நீயே எனது முதல் காதல் தெய்வம், நீயே எனது........

வசந்தா: காதல் என்பது இருவர் உள்ளத்திலும் உதயமாக வேண்டாமா? ஆவின் இரண்டு கொம்புகளைப் போல ஒரே சமயத்தில் தோன்றும் காதலைத்தான் உண்மையான காதல் என்கிறார்கள்.

முருகன்: உனக்கு என்மேல் அளவற்ற அன்பு உண்டு என்று எனக்கு நிச்சயமாகத் தெரியும்.

வசந்தா: எப்படி? நான் உங்களிடம் தாராளமாகப் பழகுவதிலிருந்தா?

முருகன்: வசந்தா, இன்னும் என்னைச் சோதனை செய்ய வேண்டாம். நான் உனக்கு அடிமை.

வசந்தா: முருகா, நான் உங்கள் கலைத்திறமையைப் போற்றுகிறேன். அதற்காக உங்களிடம் தனிப்பட்ட மதிப்பும் கொண்டிருக்கிறேன். ஆனால்........

முருகன்: இப்பொழுதுதான் உனது உள்ளத்தில் உள்ள அன்பைச் சிறிது வெளியிட ஆரம்பித்திருக்கிறாய். அன்பே, நீயும் நானுமாக........

[அருகே வர முயலுகிறான்.]

வசந்தா: (மிடுக்காக) நீங்கள் அங்கேயே நின்று பேசுங்கள். உங்கள் கலைத் திறமைக்கு மரியாதை செலுத்துகிறேனே ஒழிய, உங்கள் உள்ளப் பான்மையை நான் போற்றவில்லை.

முருகன்: காதலால் வாடும் உள்ளத்தின்மேல் உனக்கு அநுதாபம் இல்லையா?

வசந்தா: நீங்கள் காதல் என்று சொல்வதெல்லாம் என்னவென்று எனக்குத் தெரியும். எங்கே அழகைக் கண்டாலும் அதில் நீங்கள் ஆசை கொள்ளுகிறீர்கள். ஆனால் அது காதலல்ல.

முருகன்: வசந்தா, நான் கூறுவது சத்தியம். என்மீது உனக்கு........

வசந்தா: என் தோழி கமலாவிடமும் அப்படித்தான் கூறினீர்கள். அவள் இந்த இடத்தை விட்டுப்போய் மூன்று வாரங்கள்கூட ஆகவில்லையே!

முருகன்: (திகைப்புடன்) கமலா உன் தோழியா?

வசந்தா: ஆமாம், அவள் உங்களைப்பற்றி என்னிடம் சொல்லியிருக்கிறாள்.

முருகன்: கமலாவைக் காதலித்ததாக நான் கூறியது வாஸ்தவந்தான். ஆனால், அது உண்மையான காதல் அல்லவென்று நீ வந்த பிறகுதான் உணர்ந்து கொண்டேன்.

[அவன் குரலின் வலிமை குன்றுகிறது.]

வசந்தா: இதுவும் உண்மையல்லவென்பதைக் கொஞ்ச நாளில் உணர்ந்து கொள்வீர்கள்.

முருகன்: நான் காதல் கொள்வதே முடியாதென்கிறாயா?

வசந்தா: அழகின் மயக்கம் வேறு, காதல் வேறு என்றுதான் நான் சொல்லுகிறேன். அழகின் மயக்கம் மறைந்து போகும். ஆனல், காதல் நிரந்தரமானது. அது வெறும் அழகில் மட்டும் பிறக்கின்றதில்லை.

முருகன்: (யோசனையுடன் நிதானமாக) விஜயனும் அப்படித்தான் சொல்லுகிறான்.

வசந்தா: அவர் உங்களை நன்றாக அறிந்துகொண்டிருக்கிறார். அவர் மட்டுமல்ல; கமலாவும் சில நாட்களிலேயே அறிந்து கொண்டாள்.

முருகன்: உண்மையாகவா? இப்பொழுது நீயும்........

வசந்தா: கமலா உங்களுடன் பழகி உங்களைப்பற்றித் தெரிந்து வரும்படி என்னிடம் கூறினாள்.

முருகன்: அதற்காகத்தான் என்னுடன் இப்படித் தாராளமாகப் பழகினாயா?

வசந்தா: அழகைக் கலை வசப்படுத்தலாம்; ஆனல் காமம் வசப்படுத்தக் கூடாது—இது கமலா கூறிய வார்த்தை.

முருகன்: இப்பொழுது நீயும் அதையே கூறி என்னை இடித்துக் காண்பிக்கிறாய்.

வசந்தா: முருகா, என்னை நீங்கள் மன்னிக்க வேண்டும். உங்கள் கலைத் திறமையிலே எனக்கும் கமலாவுக்கும் மிகுந்த மரியாதை உண்டு........

முருகன்: ............ம்........(பெருமூச்சு விடுகிறான்).

வசந்தா: நான் போய் வருகிறேன். நாளைக்குக் காலையில் நான் உதகமண்டலம் புறப்பட எண்ணியுள்ளேன். அடுத்த விடுமுறையில் நாங்கள் இருவரும் வருவோம். அப்பொழுது நீங்கள் வரைந்துள்ள புதிய ஓவியங்களைப் பார்க்கச் சந்தர்ப்பம் கிடைக்குமென்று நினைக்கிறேன்.

[வசந்தா வெளியே செல்கிறாள். முருகன் கலக்க மடைந்தவன் போல அவள் சென்ற திசையையே பார்த்து அசையாது நிற்கிறான். மெல்ல அவன் தலை குனிகின்றது.]

திரை

# யார் விளையாட்டு?

## காட்சி ஒன்று

*இரவு மூன்று மணி. இருட்டு எங்கும் படர்ந்திருக்கிறது. நக்ஷத்திரங்களின் மங்கிய ஒளியால் ஓரளவு உருவங்கள் புலனாகின்றன. பின்னால் ஒரு சிறிய ரெயில்வே ஸ்டேஷனும் அங்குள்ள ஒன்றிரண்டு லாந்தர்களும் தோற்றமளிக்கின்றன. தூரத்தில் ரெயில் செல்லும் ஓசை கேட்கிறது.*

*ரெயிலை விட்டு இறங்கி வந்த ஒரு கிழவியும் அவளுக்குச் சற்று முன்னால் ஓர் இளமங்கையும் நாட்டுப்புறப் பாதையில் நடக்க ஆரம்பிக்கிறார்கள். கிழவிக்கு எழுபது வயதிருக்கும். கையில் ஒரு துணி மூட்டையை வைத்துக்கொண்டிருக்கிறாள். அவள் சுற்றுமுற்றும் பார்ப்பதிலிருந்து வழித்துணை தேடுவதாக அறிந்து கொள்ளலாம். இளமங்கையின் வயது 24 ஆண்டுகளுக்கு மேல் இராது. நடை உடை பாவனைகள் படித்தவள் என்பதை உணர்த்துகின்றன. தோலினால் செய்த கைப்பெட்டியை அவள் கையில் பிடித்துக்கொண்டு நடக்கிறாள்.*

**கிழவி :** யாரம்மா நீ?........எங்கே போகிறாய்?

**இளமங்கை :** (திரும்பிப் பார்த்து) பாட்டீ, என்னையா கேட்கிறீர்கள்?

**கிழவி :** ஆமாம்..........முத்தகல்லூருக்கு நான் போக வேண்டும். ஒரே இருட்டாயிருக்கிறது; அதனால் யாராவது துணை கிடைக்குமா என்றுதான் பார்க்கிறேன்.

**இளமங்கை :** முத்தகல்லூருக்கா போகிறீர்கள்? நானும் அங்கேதான் போகிறேன். வாருங்கள் போகலாம்.

**கிழவி :** நல்லவேளை! என்னைக் கொஞ்சம் அழைத்துக் கொண்டுபோ. இருட்டிலே எனக்குக் கண் நன்றாகத் தெரியாது. மூன்று மணி ரெயிலிலே வந்து இறங்கி எப்படிப் போகிறதென்று மனசு அடித்துக்கொண்டே இருந்தது.

இளமங்கை : பாட்டி, ஏன் இப்படி இரவு வேளையிலே தனியாக வந்தீர்கள்! வழியில் துணை கிடைக்காவிட்டால் ரொம்பக் கஷ்டப்படுவீர்களே!

கிழவி : என்ன செய்கிறது? இந்த ரெயிலை விட்டால் பிறகு காலையில் ஐந்து மணிக்குத்தான் அடுத்த ரெயில் வந்து சேரும். அதில் வந்தால் ஊர் போய்ச் சேருவதற்குள்ளே முகூர்த்தமெல்லாம் முடிந்துபோகும். எப்படியும் முகூர்த்தத்திற்கு முன்னே வரவேண்டுமென்று இந்தரெயிலுக்கே புறப்பட்டுவிட்டேன். நல்லவேளையாக நீ துணை கிடைத்தாய். நீயும் கல்யாணத்திற்குத்தானே....

இளமங்கை : இல்லை, பாட்டி. நான் என் சிநேகிதி வீட்டுக்குப் போகலாமென்று வந்தேன்.

[பேசிக்கொண்டே இருவரும் நடக்கிறார்கள்.]

கிழவி : சிநேகிதி வீட்டுக்கா? அதற்கா இந்த நேரத்தில் வந்தாய்? சிறு வயசுப் பெண்களெல்லாம் இப்படித் தனியாக இருட்டிலே வரலாமா? இந்தக் காலத்துப் பெண்களே இப்படித்தான். நாங்களெல்லாம் சிறு வயசாக இருக்கும்போது இப்படி யெல்லாம் வரமாட்டோம்.

இளமங்கை : என்ன பயம், பாட்டி? இங்கிருந்து ஊர் அரை மைல்தானே? தள்ளாத வயசிலே நீங்கள் தனியாக வந்திருக்கும்போது எனக்கென்ன?

கிழவி : முகூர்த்தத்தைக் காலையிலே வைத்துவிட்டார்கள். அதனால்தான் ராத்திரி வண்டிக்கு வந்தேன்.

இளமங்கை : யாருக்கு, பாட்டி, கல்யாணம்?

கிழவி : அவனுக்குத்தான் - நம்ம ராமசாமிக்கு. இத்தனை நாள் கழித்து இப்பொழுதுதான் அவனுக்கு நல்ல புத்தி வந்திருக்கிறது.

இளமங்கை : (திடுக்கிட்டு) யாருக்கு? ராமசாமிக்கா? எந்த ராமசாமி, பாட்டி?

கிழவி : பெரிய வீட்டு ராமசாமிக்குத்தான். அவன் எனக்குப் பேரன் ஆகவேணும். அவன் கல்யாணத்தைப் பார்த்துவிட்டுத்தான் சாகவேணுமென்று எனக்கு ஆசை. இப்பொழுதுதான் அவனுக்கு வேளை வந்து சேர்ந்தது.

இளமங்கை : (கலக்கத்தோடு) இந்த ஊரிலே பொதுக் காரியங்களில் எல்லாம் ஈடுபட்டு நல்ல வேலை செய்வாரே, அந்த ராமசாமிக்கா கல்யாணம்?

கிழவி: ஆமாம், அவனுக்குத்தான். ஊர்ப்பொதுக் காரியம் என்றால் அவனுக்கு உயிர். உனக்கு அவனைத் தெரியுமா? நீ முன்னால் இந்த ஊருக்கு வந்திருக்கிறாயா?

[இளமங்கை விம்மி ஏங்கிப் பெருமூச்சு விடுகிறாள். கிழவி அதைக் கவனியாமல் பேசிக்கொண்டிருக்கிறாள். அம்மங்கை அதையுணர்ந்து மனதைத் திடப்படுத்திக் கொள்கிறாள்.]

இளமங்கை : (தடுமாற்றத்துடன்) எனக்கு....எனக்குத் தெரியாது; கேள்விப்பட்டிருக்கிறேன்; அதனால் கேட்டேன்.

கிழவி : இத்தனை நாளாக அவன் கல்யாணம் பண்ணிக் கொள்ள மாட்டேனென்று ஒரே பிடிவாதம் பண்ணினான். இப்பொழுதுதான் அவனுக்கு நல்ல காலம் வந்திருக்கிறது.

இளமங்கை : ஏன் கல்யாணம் வேண்டாமென்றார்?

கிழவி : அந்தக் கூத்தை ஏன் கேட்கிறாய்? இந்த ஊரிலே ஒரு சிறுக்கி வந்திருந்தாள். வாத்தியார் வேலை பண்ணு

வசாகச் சொல்லிக்கொண்டு அவனை மயக்கிக்கொண்டிருந்தாள். இந்தப் பையனும் கல்யாணம் பண்ணினால் அவளைத்தான் பண்ணிக்கொள்வேன், இல்லாவிட்டால் கல்யாணமே வேண்டாம் என்று ஒரே பிடிவாதமாக இருந்தான்.

இளமங்கை : இப்பொழுது எப்படிச் சம்மதித்தார்?

கிழவி : இப்பொழுதா? அந்த ஊர்சுற்றி தான் எங்கேயோ ஓடிப்போய் விட்டாளே?

இளமங்கை : எங்கே போனாளோ?

கிழவி : எனக்கு எப்படித் தெரியும்? வேறு யாரையாவது மயக்கப் போயிருப்பாள்.

இளமங்கை : (தயக்கத்தோடு) அவள் பெயர் உங்களுக்குத் தெரியுமா?

கிழவி : (ஏளனமாக) சரோஜாவாம்....சரோஜா! நாய்க்குப் பேர் முத்து மாலை. அவள்தான் தொலைந்து போனாளே, இந்தப் பையன் உடனே கல்யாணம் செய்து கொள்ளப் படாதா? அவளையே தேடிப் பிடித்து வந்து பண்ணிக்கொள்வேனென்று அடம் சாதித்தான். ஒரு வருஷமாக எல்லோரும் சொல்லிச் சொல்லி இப்பொழுதான் சரியென்று சொன்னான்.

இளமங்கை : சரியென்று சொல்லி விட்டாரல்லவா?

கிழவி : என்னவோ அரை மனசாகத்தான் சொல்லியிருக்கிறான். அவன் தாய் தினந்தினம் அழுவாள். அதனால் நல்ல புத்தி வந்திருக்கிறது.

இளமங்கை : (யோசனையோடு) நான் உங்களை ஒன்று கேட்கலாமா, பாட்டி? அவர் இஷ்டப்படியே கல்யாணம் செய்துகொள்ளும்படி சொல்லியிருந்தால் என்ன கெட்டுப்போகும்?

கிழவி: நல்ல பேச்சு இது. அவன் யாரோ, என்ன சாதியோ? சாதி விட்டுச் சாதி கட்டிக்கொள்ள முடியுமா? ராமசாமி குடும்பம் என்ன லேசா? அவர்கள் கௌரவம் என்ன, காரியம் என்ன? அதெல்லாம் நினைத்துப் பார்க்காமல் நீ பேசுவதைப் பார்.

இளமங்கை: அவர் இதையெல்லாம் யோசனை செய்யாமலா இருந்திருப்பார்? அவருக்கு அவனிடத்திலே அதிக இஷ்டம்போல் இருக்கிறது.

கிழவி: அவனுக்கா இஷ்டம்? அதெல்லாம் அவன் பண்ணின மாயம். அவன் சாதியை விட்டுப் போவானா? தங்கமான பிள்ளையாச்சே!

இளமங்கை: உங்கள் விருப்பப்படி முழு மனதோடு ஒப்புக்கொண்டாரல்லவா?

கிழவி: என்னவோ முகூர்த்தம் வைத்தாய் விட்டது. கல்யாணம் ஆனால் எல்லாம் சரியாகிவிடும். எங்கள் காலத்திலெல்லாம் இப்படிக் கிடையாது. தாய் தகப்பன் சொல்படிதான் கல்யாணம் நடக்கும். இதெல்லாம் இந்தக் காலத்தின் கூத்து.

இளமங்கை: மனசுக்குப் பிடித்தமாக இருக்கும் இடத்திலே கல்யாணம் செய்துகொள்ளுவதுதானே நல்லது, பாட்டி?

கிழவி: இந்தக் காலத்துப் பெண்களே இப்படித்தான். காலம் கெட்டுப் போய்விட்டது. அப்படி வேண்டுமானாலும் சொந்தத்திற்குள்ளே மனசுக்குப் பிடித்த பெண்ணாகப் பார்த்துப் பண்ணிக் கொள்ளலாமே! இவன் சாதி விட்டுச் சாதி போகப் பார்த்தானே!

இளமங்கை: ஏன் பாட்டி, அவர் பிடிவாதமாக அந்த சரோஜாவையே கல்யாணம் செய்திருந்தால் நீங்கள் என்ன பண்ணுவீர்கள்?

[அவள் குரலில் ஓர் ஆர்வம் தொனிக்கிறது.]

கிழவி: என்ன பண்ணுவோமா ? அவளைச் சாதியிலே சேர்த்துக்கொள்ளமாட்டோம். தள்ளிவைத்துச் சாதிக் கட்டுமானம் செய்துவிடுவோம்.

இளமங்கை: என்ன பாட்டி, உங்கள் பேரன் என்று சொன்னீர்களே, அவரையா அப்படித் தள்ளி வைப்பீர்கள் ?

கிழவி: பேரன்தான். அதனால் என்ன வேண்டுமானாலும் பண்ணலாமா ! எங்கள் சாதியிலே இதுவரையில் யாரும் இப்படி நினைத்ததுகூடக் கிடையாது.

இளமங்கை: அவர் சந்தோஷம் உங்களுக்குப் பெரிதில்லை—அப்படித்தானே ?

கிழவி: அவன் சந்தோஷமாக இருக்கத்தானே நாங்கள் இந்தப் பாடு படுகிறோம் ? குலத்தில் ஒரு பெண் என்று சொல்லுவார்கள். நமது சாதியிலே பண்ணினால்தான் சந்தோஷம், வாழ்வு, எல்லாம்.

இளமங்கை: சாதி இல்லாமல்போனால் சந்தோஷம் இருக்காதோ ?

கிழவி: நாலு நாளைக்கு இருக்கும். பிறகு நீ யாரோ நானோ என்று போகும். அது இருக்கட்டும்; உனக்குக் கல்யாணம் ஆய்விட்டதா ?

இளமங்கை: இன்னும் இல்லை.

கிழவி: கல்யாணம் ஆகாத பெண்ணை இப்படித் தனியாக வருகிறாய் ?

இளமங்கை: வந்தால் என்ன தப்பு ?

கிழவி: இருந்தாலும் உனக்கு இத்தனை துடுக்கு ஆகாது. ஊரிலே எல்லோரையும் நல்லவரென்று எப்படி நம்புவது ?

இளமங்கை : இதோ ஊர் வந்தாயிற்று, பாட்டி. நீங்கள் போகிறீர்களா ? என் சிநேகிதி வீட்டிற்கு இந்தப் பக்கம் போகவேண்டும்.

கிழவி : ஊருக்கு வந்துவிட்டோம். பேசிக்கொண்டே வந்ததில் சலிப்பே தெரியவில்லை. நீ சுகமாக இருக்க வேணும். போகிருயா ? ஏன், நீயும் என்கூட வரக் கூடாதா ? கல்யாண வீட்டுக்கு வந்துவிட்டுப் போனல் போகிறது. இந்த இருட்டிலே எப்படி உன் சிநேகிதி வீட்டுக்குப் போவாய் ?

இளமங்கை : போய் விடுவேன். அவள் தனியாகத்தான் வசிக்கிருள். வீட்டிலே வேறு யாரும கிடையாது.

கிழவி : சாக்கிரதையாகப் போ அம்மா. நீ ரொம்ப நல்ல பெண்ணுக இருக்கிருய். என் பேரனுக்குக் கிடைக்கிற பெண்ணும் உன்னைப்போல இருக்கவேணும்.

இளமங்கை : போய் வருகிறேன் பாட்டி.

[இருவரும் பிரிந்து வேறு வேறு வீதிகளில் போகிருர்கள்.]

## காட்சி இரண்டு

அதே இரவு. சுமார் நான்கு மணி இருக்கும். ஒரு கிரா மாந்தர வீடு. லாந்தர் விளக்கு மங்கலாக எரிந்துகொண் டிருக்கிறது. வீட்டின் இடது புறத்திலிருந்த கதவை வெளியிலிருந்து யாரோ மெதுவாகத் தட்டுகிருர்கள். அக்கா, அக்கா என்ற குரல் கேட்கிறது. மறுபடியும் மெது வாகத் தட்டும் சப்தம். கட்டிலில் படுத்திருந்த ஒரு விதவை எழுந்து கவனித்துக் கேட்கிருள். பிறகு கதவின் அருகே வருகிருள். அவளுக்கு வயது முப்பத்தைந்து இருக்கும். வெள்ளை உடை தரித்திருக்கிருள். வாழ்வில் இன்பம் காணு தவள் என்பதை அவள் முகம் காண்பிக்கிறது.

விதவை : யாரது இந் நேரத்தில் கதவைத் தட்டுவது ?

வெளியிலிருந்து பெண் குரல் : (மெதுவாக) மருதாயி அக்கா, நான்தான் சரோஜா.

மருதாயி : (ஆச்சரியத்தோடு) யார், சரோஜாவா ?

[கதவை விரைவாகச் சென்று திறக்கிறள், ரெயிலிலிருந்து கிழவியுடன் வந்த இளமங்கை உள்ளே நுழைகிறள்.]

சரோஜா, இந் நேரத்தில் எப்படி வந்தாய் ?

[அவளைக் கட்டி அணைத்துக் கொள்கிறள்.]

சரோஜா : அக்கா, உங்களைப் பார்த்துவிட்டுப் போகலாமென்றுதான் வந்தேன்.

மருதாயி : திடீரென்று யாரிடமும் சொல்லாமல் ஓடிப் போய்விட்டாயே ? இந்த ஒரு வருஷமாக எங்கே இருந்தாய் ? உன்னை எங்கெல்லாமோ தேடித் தேடிப் பார்த்தானே அவன் ?

[வெளிக் கதவைத் தாழிட்டுவிட்டு மருதாயி வருகிறள். இருவரும் வீட்டுத் தாழ்வாரத்தில் உட்காருகிருர்கள்.]

சரோஜா : என்னை எதற்காகத் தேடவேண்டும் ? நான் தான் போய்விட்டேனே, அக்கா ?

மருதாயி : என்ன இருந்தாலும் நீ அப்படிப் போகலாமா? இப்பொழுது பார், என்ன ஆயிற்று ? உன்னைக் காணமல் அவன்.........

சரோஜா : (சட்டென்று) என்ன ஆயிற்று? எல்லாம் நல்லதுதான் ஆயிற்று....

மருதாயி : நிஜமாகத்தான் நீ பேசுகிறாயா? அவனுக்கு இன்றைக்குக் கல்யாணம் நடக்கப் போகிறது. உனக்குத் தெரியுமா? எட்டுமணிக்கு முகூர்த்தம். பக்கத்து ஊரிலே பெண். இன்னும் கொஞ்ச நேரத்திலே எல்லோரும் அங்கே புறப்பட்டுப் போவார்கள்.

சரோஜா : எனக்கு இதெல்லாம் வரும்போதே தெரிந்து விட்டது.

மருதாயி : எப்படித் தெரிந்தது?

சரோஜா : யாரோ ஒரு பாட்டியம்மாள் கல்யாணத்துக்கு வந்தார்கள். அவர்கள் மூலம் அறிந்தேன்.

மருதாயி : அவளுக்கு உன்னை இன்னாரென்று தெரிய வில்லையா?

சரோஜா : இல்லை, அந்தப் பாட்டி என்னை நேரிலே பார்த்ததில்லை போலிருக்கிறது. மேலும் அவர்களுக்கு இருட்டிலே கண் சரியாகத் தெரியாது.

மருதாயி : ராமசாமிக்கு இந்தக் கல்யாணம் கொஞ்சங் கூட இஷ்டம் இல்லை. அவன் தாய் வைத்த ஒப்பாரி யைத் தாங்கமுடியாமல்........

சரோஜா : தாயாருக்கு இனி சந்தோஷமாக இருக்கும், இல்லையா?

மருதாயி : தாய்க்கும் சந்தோஷந்தான்; பந்துக்களுக்கும் சந்தோஷந்தான்....ஆனால்....

சரோஜா : (சிறிது ஆத்திரத்தோடு) ஆனால் என்ன? எல்லோரும் சந்தோஷமாக இருந்தால் போதும்.

மருதாயி : ராமசாமிக்கு சந்தோஷம் வேண்டாமா?.... பிறகு, உன் கதி என்ன ஆகிறது?

சரோஜா: எனக்கு என் வேலை இருக்கிறது. எப்படியோ காலத்தைத் தள்ளவேண்டியது.

[எழுந்து பக்கத்திலிருந்த தூணைப் பிடித்துக்கொண்டு நிற்கிறாள்.]

மருதாயி: நீ எதற்காக இங்கிருந்து யாருக்கும் சொல்லாமல் போனாய்?

சரோஜா: (சோகத்தோடு) அவர் என்னை மறந்துவிடட்டும் என்பதற்காகத்தான்.

மருதாயி: அவன் உன்னை மறக்கவே இல்லை. இனிமேல் மறக்கப்போவதும் இல்லை. அது எனக்கு நன்றாகத் தெரியும். .....நீ மாத்திரம் அவனை மறக்கப்போகிறாயா ?

சரோஜா: (அருகில் வந்து அமர்ந்து) அக்கா, என் மனநிலைமை உங்களுக்கு நன்றாகத் தெரியும். நான் என்ன செய்வது? இங்கே நான் வேலை பார்த்துக்கொண்டிருக்கும் வரை அவருடைய பந்துக்கள் எல்லோரும் என்னை ஏசினதும் பேசினதும் உங்களுக்குத் தெரியாதா ?

மருதாயி: எல்லாம் எனக்குத் தெரியும் சரோஜா. ஆனால்....

சரோஜா: நான் அதையெல்லாம் பொருட்படுத்தினேனா? இல்லவே இல்லை. ஆனால் அவரைச் சாதிப் பிரஷ்டம் செய்துவிடுவதாகச் சொன்னதுதான் எனக்குக் கவலையாக இருந்தது.

மருதாயி: (விசனத்தோடு) அதற்காக நீ இப்படி ஓடிப் போகலாமா?

சரோஜா: அக்கா, ஊரெல்லாம் ஒன்று சேர்ந்துகொண்டு அவருக்குத் தொந்தரவு கொடுத்தால் அதை எப்படி அவர் சமாளிக்க முடியும்? இதுவோ கிராமாந்தரம். பட்டணமாக இருந்தால் கவலையில்லை. இங்கே பழைய சம்பிரதாயங்கள் வேரூன்றி இருக்கின்றனவே!.... அதோடு சற்

றிலும் உள்ளவர்களுடைய உதவியில்லாமல் இங்கு வாழ முடியுமா? அவர் என்னை மறந்துவிட்டுச் சாதி வழக்கப் படி கல்யாணம் செய்துகொண்டு நிம்மதியாக இருக்கட் டும் என்று நினைத்துத்தான் போனேன்.

மருதாயி: என்னிடம்கூடச் சொல்லாமல் போய்விட்டாயே!

சரோஜா: உங்களிடம் சொன்னால் நான் போவதற்குச் சம்மதிப்பீர்களா? உடனே அவரிடம் விஷயத்தைச் சொல்லி...

மருதாயி: சரோஜா, என்மேல் உனக்கு நம்பிக்கை இல்லையா?

சரோஜா: நம்பிக்கையா? எங்கிருந்தோ வந்த என்னை உடன் பிறந்த சகோதரியாக நினைத்து நீங்கள் நடத்தி யதை நான் உயிருள்ளவரை மறக்க முடியுமா?

மருதாயி: நீ இங்கே இருந்தபோது என் இருண்ட வாழ் விலே கொஞ்சம் வெளிச்சம் இருந்தது. இப்போது பழையபடி எல்லாம் இருட்டாய்விட்டது. நீங்கள் இரண்டு பேரும் குடும்பம் நடத்துவதைப் பார்த்து சந்தோஷப் பட நான் கனவு கண்டுகொண்டிருந்தேன்.

சரோஜா: (ஏக்கத்தோடு) அக்கா, அதையெல்லாம் பேசி என்னபலன்? விதிப்படித்தான் எல்லாம் நடக்கும் என்று நீங்களே அடிக்கடி சொல்லுவீர்கள். இல்லாவிட்டால் இப்படிச் சிறு வயதிலேயே உங்களை விட்டுவிட்டு அவர் இறப்பாரா?

மருதாயி: அதை இப்பொழுது எதற்கு நினைக்கிறாய்? என் கதிதான் முன்னமேயே தீர்மானம் ஆகிவிட்டது, இப் பொழுது உன் விஷயத்திற்கு என்ன செய்யலாம்? சும்மா பேசிக்கொண்டே இருந்தால் காரியம் மிஞ்சிவிடும்.

சரோஜா: திரும்பிப் போவதற்கு அடுத்த ரெயில் எப் பொழுது என்றுதான் பார்க்கவேண்டும். அதுதான் உடனே செய்யவேண்டியது.

மருதாயி: சரோஜா, நிஜமாகவா? பின் எதற்காக வந்தாய்?

சரோஜா: அவர் எப்படி இருக்கிறார் என்று பார்க்க ஆசையாக இருந்தது. அதனால் பார்க்க வந்தேன். (அழுது கொண்டே) அவரைப் பிரிந்து என்னால் இருக்க முடியவில்லை. ஆனால் அவரைப் பார்க்காமலே திரும்பிப் போவதுதான் நல்லதென்று இப்பொழுது நினைக்கிறேன். அவருக்கு நான் வந்தது கூடத் தெரியக்கூடாது.

மருதாயி: அவனுக்குத் தெரியவேண்டும் என்பதுதான் என் ஆசை. நான் இப்பொழுதே போய்ச் சொல்லி....

சரோஜா: அக்கா, வேண்டவே வேண்டாம். அவர் சுகமாக இருந்தால் அதுவே போதும் எனக்கு.

மருதாயி: சரோஜா, நீ நிஜமாகத்தான் பேசுகிறாயா? உள்ளதைச் சொல்லு; நீ அவனை மறந்துவிட்டாயா?

சரோஜா: அக்கா, நீங்கள் கூடவா என்னை இப்படிச் சோதனை செய்யவேணும்? என் மனசு உங்களுக்குத் தெரியாதா? நான் அவரை மறக்க முடியுமா?

[அவள் குரலில் துக்கம் பீரிட்டு வெளிப்படுகிறது.]

மருதாயி: பிறகு எதற்காக உடனே போகவேண்டும் என்கிறாய்?

சரோஜா: வேறு வழி? பந்துக்களுடைய வெறுப்பை நினைத்து அன்றைக்கு நான் ஓடிப்போனேன். இப்பொழுது அவருக்குக் கல்யாணம் நடக்கப்போகிறது. அப்படி நடக்கட்டும் என்றுதான் போனேன். நான் மறுபடியும் இங்கே தலை காட்டினால் அவருக்குத்தான் வீண் துன்பம் ஏற்படும். இல்லையா அக்கா?

மருதாயி: எப்படி சரோஜா நான் உன்னைப் போ என்று சொல்லட்டும்?

சரோஜா: அக்கா, நேரமாகிறது. அடுத்த ரெயிலுக்கு நான் எப்படியும் போயாகவேண்டும். நீங்கள் கொஞ்சம் யோசனை செய்து பாருங்கள். நான் இங்கே இருந்து பிரயோசனம்?

மருதாயி: (இரக்கத்தோடு) ஆமாம், நீ சொல்வது மெய் தான். இனி இங்கிருந்து என்ன செய்யப் போகிறாய்? நீ நேற்றுவரது வந்திருக்கக்கூடாதா?

[சரோஜாவின் தோள் மேல் கையைப் போடுகிறாள். கண் களில் நீர் பிதுங்குகிறது.]

சரோஜா: (வருத்தத்தோடு) அப்படியெல்லாம் நினைத்து ஏங்கி இனி ஒன்றும் ஆகப் போவதில்லை. நான் போய் வரட்டா—நான் போகட்டுமா, அக்கா? என்னை மறந்து... (குரல் கம்முகிறது.)

மருதாயி: சரோஜா, நானும் உன்னோடு வருகிறேன். ஸ்டேஷன் வரையிலாவது இருவரும் சேர்ந்திருப்போம்.

## காட்சி மூன்று

அதே இரவு. மணி சுமார் ஐந்திருக்கும். கல்யாண வீட்டிலே ஓர் அறை. மஞ்சத்தின் மீது மணமகன் யோசனையோடு படுத்திருக்கிறான். அவனுக்கு வயது முப்பது இருக்கும். கதர் உடுத்திருக்கிறான். அவன் திரும்பித் திரும்பிப் புரளுவதிலிருந்து அவனுடைய மனக் கலக்கம் வெளியாகிறது. வெளியே பலவகையான ஆரவாரம் மெதுவாகக் கேட்கிறது. நாகசுர ஒலியும் தூரத்தில் முழங்குகிறது. அறையின் கதவைத் திறந்துகொண்டு மணமகனின் தாய் உள்ளே நுழைகிறாள். ஐம்பதைத் தாண்டிய விதவை அவள். வெள்ளை உடை கிராமத்து முறையில் கட்டியிருக்கிறாள். அவள் முகத்தில் கவலை படர்ந்திருக்கிறது. மஞ்சத்தின் அருகே சென்று மகனைப் பார்த்துப் பேசுகிறாள்.

தாயார்: ராமசாமி, இன்னும் படுத்துக்கொண்டிருக்கிறாயே? புறப்படுவதற்கு எல்லாம் தயாராகி விட்டது.

நேரமே போனால்தான் முகூர்த்த வேளைக்குச் சரியாக அங்கே இருக்க முடியும்.

ராமசாமி : நான்தான் தயாராக இருக்கிறேனே!—இன் னும் என்ன செய்யவேண்டும்?

தாயார் : குளிக்கவேண்டாமா? புது வேட்டி கட்டவேண் டாமா? மாப்பிள்ளை என்றால் அதற்கு வேண்டிய மாதிரி செய்ய வேண்டுமோ இல்லையோ?

ராமசாமி : ஆகா, இந்தக் கோலம் போதும்.

தாயார் : (கவலையோடு) சும்மா படுத்துக்கொண்டே இருந் தால் எப்படி? வந்த பந்துக்களிடம் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. உன் தகப்பனர் இருந்தால் அவரே எல்லாம் கவனித்துக் கொள்வார். இப்பொழுது நீ தானே அவை யெல்லாம் கவனிக்கவேண்டும்?

ராமசாமி : (சிடுசிடுப்பாக) எதற்காக நான் கவனிக்கவேண் டும்? அவர்களை யார் வரச் சொன்னார்கள்?

தாயார் : (சாந்தமாக) சரி, நீ ஒன்றும் கவனிக்கவேண் டாம். எழுந்து குளித்துவிட்டு வா; நேரமாகிறது.

ராமசாமி : எல்லோரும் வந்துவிட்டார்களா?

தாயார் : நேற்று சாயங்காலமே வந்தாய் விட்டது. ஒருத்தர் பாக்கி இல்லை. பாட்டிகூட மூன்று மணி ரெயிலிலேயே வந்து விட்டாள்.

ராமசாமி : பாட்டிக்கு இனி திம்மதிதான். எனக்குக் கல் யாணம் ஆகாமல் பாட்டிக்குச் சாவுகூட வரவில்லை.

தாயார் : முகூர்த்த நாளிலே இப்படி யெல்லாம் பேசாதே. அவளுக்கு நீதான் உயிர்.

ராமசாமி : நான் சொன்னால் சாவு வந்துவிடுமா? பாட்டி இப்பொழுது எங்கே சாகப் போகிறாள்? என் குழந்தை குட்டிகளைப் பார்க்காமல் அவள் சாகமாட்டாள்.

தாயார் : சரி ராமு, நீ இப்படியே பேசிக்கொண்டிருந்தால் நேரமாகிறது.

ராமசாமி : மருதாயி அக்கா வந்துவிட்டார்களா? அவர்களைக் கூட்டி வரச் சொன்னேனே?

தாயார் : மருதாயியா? இப்பொழுதுதான் வீட்டிற்கு ஆள் விட்டேன். அவளை அங்கே காணுமாம். வீடு பூட்டிக் கிடக்கிறது.

ராமசாமி : எங்கே போயிருப்பார்கள்? இன்னொரு தடவை ஆள் விட்டுப் பாருங்கள்.

தாயார் : அவள் இருந்தால் கூட இந்தச் சமயத்தில் இங்கே வரமாட்டாள். முகூர்த்தத்துக்குப் புறப்படுகிறபோது அவள் எதிரிலே வருவாளா?

ராமசாமி : என்ன, மருதாயி அக்காள்கூட வரப்படாதா? அவர்கள் வராமல்....

தாயார் : (சற்றுப் பொறுமை இழந்து) சரி, ராமு, உன் இஷ்டம்போல் செய். இதோ மறுபடியும் ஆள் அனுப்புகிறேன். அக்காள் அக்காளென்று அவள்தான் உனக்கு அக்காள், வேறு ஒருத்தரும் அக்காளும் இல்லை, தங்கையும் இல்லை. உன்னோடு ஒருத்தருமே பிறக்கவில்லை.

ராமசாமி : ஆமாம். அக்காள், தங்கை, அம்மான் இத்தனை பேரும் இல்லாவிட்டால் இந்தக் கல்யாணம் நடக்குமா? உங்களுக்குத்தானே கல்யாணம்? அவர்கள் எல்லாம் வந்து விட்டார்களா?

தாயார் : வராமலா இருப்பார்கள்? நேற்று சாயங்காலம் பேசிக்கொண்டிருந்தாயே, மறந்து விட்டாயா?—சின்ன மச்சான்தான் இன்னும் வரவில்லை. ஐந்து மணி ரெயிலிலே வந்து விடுவார்கள்.

ராமசாமி : ரெயில் வரும் நேரம் ஆகிவிட்டதே! நான் ஸ்டேஷனுக்குப் போய் அவரை அழைத்து வரட்டுமா?

ஜவாஹர்பாய்: நான் நாளைக் காலையில் போர் முனைக்குச் செல்லுகிறேன். என் உயிருள்ள வரையில் பகைவன் உன்னை நுழையாமல் காப்பேன். பிறகு நடக்கிறது நடக்கட்டும்.

[அவன் மற்றோர் அறைக்குள் செல்கிறான். கருணாவதி யோசனையோடு நிற்கிறாள்.]

## காட்சி இரண்டு

சித்தூர் அரண்மனையிலே கருணாவதியின் அறை. இரவு 9 மணிக்குக் கருணாவதியும் அவளுடைய அந்தரங்கத் தோழி வாசந்தியும் சகஜமாக அமர்ந்து பேசிக் கொண்டிருக்கிறார்கள்.

கருணாவதி: வாசந்தி, ராணியம்மாள் அந்தத் தகர்ந்து போன கோட்டைச் சுவரின் முன்பு படுகாயமுற்று வீழ்ந்தபோதும், அவர் முகத்திலே எவ்வளவு கம்பீரம் இருந்தது, பார்த்தாயா?

வாசந்தி: அவருடைய வீராவேசத்தைக் கண்டுதான் சென்ற இரண்டு நாட்களாகப் பகைவர்கள் உள்ளே நுழையாதபடி மதில் சுவரில் தகர்ந்துபோன பாகத்தை நம் வீரர்கள் தமது உடம்பினால் அடைத்துப் போர் செய்தார்கள்.

கருணாவதி: ராணியம்மாளை யுத்த கோலத்தில் பார்த்த போது எனக்குச் சித்தூரின் காவல் தெய்வமே ஞாபகத்திற்கு வந்தது.

வாசந்தி: இரவிலே பார்த்தால் ராணி ஜவாஹர்பாய் பகைவர்களின் கண்ணிலே காளிதேவியைப் போலத் தோன்றினாராம்.

கருணாவதி: காளிதேவியின் அருள் நமக்கு இனிமேலும் இராமல் போகாது.

வாசந்தி : கருணாவதிதேவி, இனி நீங்கள்தானே இந்தக் கோட்டைக்கு ராணி? உங்கள் உத்தரவை எல்லோரும் எதிர் பார்த்திருக்கிறார்கள்.

கருணாவதி : ஆமாம், நான்தான் கோட்டையைப் பாது காக்கவேண்டும். வாசந்தி, என் குழந்தை உதயசிங் பத்திரமாகப் போய்ச் சேர்ந்திருப்பானா? (அவள் குரலிலே கவலை தொனிக்கிறது.)

வாசந்தி : அவனைப்பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டிய தில்லை.

கருணாவதி : உன்னை ஒன்று கேட்க வேண்டுமென நினைத் தேன். மூன்று வருஷங்களுக்கு முன்பு ஹூமாயூ னிடம் என்னுடைய கங்கணத்தைக் கொடுத்தாயே; அப்பொழுது அவர் என்ன சொன்னார்?

வாசந்தி : கங்கணத்தை ஏற்றுக் கொண்டவன் எப்படி நடந்து கொள்ள வேண்டுமோ அப்படி நடந்து கொள்வ தாகத்தான் சொன்னார்.

கருணாவதி : ஹூமாயூன் உண்மை வீரனென்று தான் நினைக்கிறேன். ஆனால் இன்றைக்குச் செய்தி அனுப்பி னால் அவர் வரும் வரையில் நாம் கோட்டையைக் காக்க முடியுமா என்பதுதான் சந்தேகம். எங்கே, அந்தத் 'தியோலி' இளவரசர் பாக்ஜியை வரும்படி சொல்லியிருந்தேனே?

வாசந்தி : அதோ அவரும் வந்து விட்டார்.

[தியோலி என்ற சிறு நாட்டின் இளவரசனான பாக்ஜிக்கு வயசு 25-க்கு மேலிராது. தியாக உணர்ச்சியோடு சித்தூருக்கு உதவி செய்ய வந்திருக் கிறான்.]

கருணாவதி : இளவரசரே, வாருங்கள்.

பாக்ஜி : ராணி கருணாவதி, வணக்கம். தங்களுடைய ஆணையை நிறைவேற்ற நாங்கள் அனைவரும் சித்தமாக இருக்கிறோம்.

[கருணாவதி காட்டிய ஆசனத்தில் அமர்கிறான்.]

கருணாவதி : சித்தூரின் பெயரைக் காப்பாற்ற நீங்கள் தயாராக இருப்பதை நான் அறிவேன். காலைக்குப் போர் தொடங்கு முன் செய்ய வேண்டிய முக்கியமான காரியம் ஒன்று இருக்கிறது. அதைப்பற்றி ஆலோசிக்கத்தான் உங்களை அழைத்தேன். இப்பொழுது மிகத் துரிதமாகச் செல்லக்கூடிய இரண்டு குதிரை வீரர்களை வெளியே அனுப்பவேண்டும்.

பாக்ஜி : உடனே ஏற்பாடு செய்கிறேன். அவர்களை ரகசிய வழியின் மூலம் வெளியேறித் தியோலிக்குப் போகச் சொல்லுகிறேன். அங்கே எனது கடிதத்தைக் காட்டிச் சிறந்த குதிரைகளைப் பெற்றுக்கொள்ளுவார்கள். அவர்கள் எங்கே போகவேண்டும்?

கருணாவதி : ஹுமாயூனுக்குக் கடிதம் எடுத்துச் செல்ல வேண்டும்.

பாக்ஜி : (ஆச்சரியத்தோடு) ஹுமாயூனுக்கா?

கருணாவதி : (நிதானமாக) ஆமாம், அவர் என் கங்கணத்தைப் பெற்றிருக்கிறார். இந்தச் சமயத்தில் அவரை உதவிக்கு அழைக்க எண்ணியிருக்கிறேன்.

பாக்ஜி : அந்த மிலேச்சன் நமக்கு உதவி புரிவானா? குஜராத் சுல்தானும் அவனும் ஒரே ஜாதியாயிற்றே?

கருணாவதி : ஹுமாயூன் கங்கணத்தைப் பெற்றுக் கொண்டதால் எனக்கு எந்தச் சமயத்திலும் உதவி செய்வார் என்று நினைக்கிறேன்.

பாக்ஜி : அந்த தர்மம் ராஜபுத்திரனுக்குத்தான் தெரியும். இந்த மிலேச்சனுக்கு....

கருணாவதி : நான் அவரை அப்படித் தாழ்வாக மதிக்கவில்லை. அவர் ஒரு சுத்த வீரர்.

பாக்ஜி : அப்படி வருவதானாலும் ஹூமாயூன் இப்பொழுது வங்காளத்தில் நெருக்கடியான போரில் ஈடுபட்டிருக்கிறான். அங்கிருந்து இங்கு வர எத்தனை நாளாகுமோ? அது வரை நாம் தாக்குப் பிடிக்க வேண்டுமல்லவா?

கருணாவதி : நான் முன்பே அவர் உதவியை நாட விரும்பினேன். ஆனால் ராணியம்மாள் அதற்கு இணங்கவில்லை. இன்று என் இஷ்டப்படி அவருக்குக் கடிதம் அனுப்பலாம் அல்லவா?

பாக்ஜி : உங்கள் ஆணைக்கு எதிர் நான் சொல்லமாட்டேன். ஆனால் தங்கள் கணவருக்கு நேர்ந்ததை எண்ணிப் பார்த்தால்........?

கருணாவதி : இன்று சித்தூரைக் காக்கவேண்டுமானால் வேறு வழி கிடையாது.

பாக்ஜி : ஹூமாயூன் வருவானென்று வைத்துக்கொண்டாலும், இன்னும் குறைந்தது மூன்று நான்கு நாட்களுக்கு நாம் பகதூரை உள்ளே புகவிடாமல் காக்க வேண்டும்.

கருணாவதி : ஆமாம்; நாளைக் காலையில் யுத்த முனைக்கு நான் செல்லுகிறேன். ராணி ஜவாஹர்பாய் பிடித்த வாள் இன்னும் மங்கிப் போகவில்லையல்லவா?

பாக்ஜி : கருணாவதிதேவி, நீங்கள் அர்ஜுனசிங்கின் வீரத் தங்கை என்பதை ஒப்புக்கொள்கிறேன். ஆனால் மீதியிருக்கும் நம் வீரர்களை முன்னின்று நடத்தும் பாக்கியம் எனக்குக் கிடைக்கக் கூடாதா?

கருணாவதி : இளவரசே, உங்களை வேறொரு முக்கியக் காரியத்திற்காக ஒதுக்கி வைத்திருக்கிறேன். ஹுமாயூன் வருவதற்குள் நம் வீரர்களில் பெரும்பாலோர் ரணகளத்தில் உயிர் துறந்துவிட்டால், கடைசியிலே இங்குள்ள பெண்களெல்லாம் தீப் புகுமுன்பு, கோட்டையை விட்டு வெளிக் கிளம்பிப் பகைவரின் மத்தியிலே புகுந்து சிங்கங்களென ஆர்ப்பரித்து உயிர் குடிக்கப்போகும் மற்ற வீரர்களுக்கு ஒரு தலைவன் வேண்டும் அல்லவா? உங்களுடைய தலைமையில் நம் வீர ரத்தினங்கள் செய்யும் சாகசச் செயல்களைப் பார்த்துக்கொண்டு பெருமிதத்தோடு நாங்கள் தீப் புக வேண்டும். அதற்கு உங்களை எதிர் பார்த்திருக்கிறேன்.

பாக்ஜி : தேவி, உங்கள் ஆணை; என்னை இவ்வளவு உயர்வாக மதித்திருக்கும் உங்களுக்கு எனது நன்றி.

[கருணாவதியைப் பணிகிறான். அவன் முகத்தில் மகிழ்ச்சிக் குறி தாண்டவமாடுகிறது.]

## காட்சி மூன்று

வங்க நாட்டிலே ஒரு பாசறை. உச்சி வேளை. தூரத்திலே போர் ஆரவாரம் கேட்கின்றது. ஹுமாயூன் யாரையோ அவசரமாக எதிர் பார்த்திருக்கிறான். அவனுடைய சேனாதிபதி வேகமாக உள்ளே வந்து வணங்கி நிற்கிறான். ஹுமாயூனுக்கு முப்பது வயதிருக்கலாம். நறுக்கி விடப்பட்ட மீசையும் தாடியும் அவன் முகத்திற்கு அழகு செய்கின்றன. சேனாதிபதிக்கு நாற்பது வயசு இருக்கும்.

ஹுமாயூன் : சேனாதிபதி, நான் உடனே சித்தூரை நோக்கிப் புறப்படவேண்டும்.

சேனாதிபதி : (ஆச்சரியத்தோடு) பாதுஷா! என்ன சொன்னீர்கள் ?

ஹுமாயூன்: ஆமாம், நான் புறப்படவேண்டும். உடனே மூப்பது ஆயிரம் குதிரை வீரர்களை ஆயத்தம் செய்.

சேனாதிபதி: இன்னும் சில மணி நேரத்தில் இங்கே நமக்குப் பெரிய வெற்றி கிடைக்கப்போகிறது. அதை விட்டுவிட்டா?

ஹுமாயூன்: அந்த வெற்றியைப்பற்றி யெல்லாம் இப்பொழுது எனக்குக் கவலை இல்லை. நீ அதைக் கவனித்துக் கொள். நான் போயாக வேண்டும்.

சேனாதிபதி: நமது குதிரைப்படைதானே இப்பொழுது வெற்றிக்குக் காரணமாக இருக்கிறது? அதைச் சித்தூருக்கு அனுப்பிவிட்டால் கைக்குக் கிடைத்த வெற்றி...

[ஹுமாயூன் சமிக்ஞை செய்ய மெதுவாக ஆசனத்தில் உட்காருகிறான்.]

ஹுமாயூன்: சேனாதிபதி, உனக்கு வெற்றிதான் பெரிதாகத் தெரிகிறது. நான் இப்பொழுதே புறப்படாவிட்டால் கொடுத்த வாக்கைக் காப்பாற்ற முடியாது.

சேனாதிபதி: பிரபு, தாங்கள் சொல்லுவது எனக்கு விளங்கவில்லையே?

ஹுமாயூன்: என் உதவியை நாடி ராணி கருணாவதி கடிதம் அனுப்பியிருக்கிறாள். அவளிடம் கங்கணப் பரிசைப் பெறுகின்ற அதிருஷ்டம் எனக்குக் கிடைத்தது.

சேனாதிபதி: கங்கணப் பரிசா? அதென்ன வேடிக்கை?

[லேசாகச் சிரிக்கிறான்.]

ஹுமாயூன்: அது வேடிக்கை அல்ல. உனக்கு இந்தத் தேசத்து வழக்கம் தெரியாது. இதை 'ரக்ஷாபந்தனம்' என்று சொல்லுகிறார்கள். ஒரு பெண்மணியிடமிருந்து இதை ஏற்றுக்கொண்டவன் யாரானாலும் சரி, அவனுக்

குச் சகோதரனாகி விடுகிறான். ஆபத்துக் காலத்தில் அவன் உதவிக்கு வரவேண்டும்.

சேனாதிபதி: பாதுஷா, எனக்கு அந்த வழக்கமெல்லாம் தெரியவில்லை. நீங்கள் இப்பொழுது நினைக்கிறபடி செய்தால் நமது ராஜ்யத்திற்கே ஆபத்து வந்துவிடும்.

ஹுமாயூன்: இந்த ராஜ்யம் எனக்குப் பரம்பரைச்சொத் தல்லவே? போனால் பரவாயில்லை.

சேனாதிபதி: நீங்கள் கொஞ்சம் நிதானமாக யோசிக்க வேண்டுமென்று வேண்டுகிறேன். இந்தப் போரிலே தோல்வி யென்றால் பிறகு நமக்குத் தஞ்சம் புகக்கூட இந்தியாவில் இடம் இராது.

ஹுமாயூன்: சேனாதிபதி, வீணைக் காலதாமதம் செய்து கொண்டிருக்கவேண்டாம். நான் சித்தூருக்குப் போகா மல் இருக்க முடியாது. அதனால் எனக்கு என்ன தோல்வி ஏற்பட்டாலும் சரி.

[முன்பே முடிவு செய்துவிட்டது போலப் பேச்சு உறுதியோடு வருகிறது.]

சேனாதிபதி: பாதுஷா, நான் உங்களுடைய ஊழியன்; நீங்கள் இட்ட பணியைச் செய்வதுதான் எனது வேலை. ஆனால் ஒரு பெண்ணுக்காக நீங்கள் ராஜ்யம் இழந்து விடுவதை நான் விரும்பவில்லை.

ஹுமாயூன்: (அதட்டிய குரலில்) என்ன சொன்னாய்? பெண்ணுக்காகவா? அவளிடம் ஆசை என்று நினைக் கிறாய்?

சேனாதிபதி: இந்த நெருக்கடியான சமயத்தில் அதைச் சுட்டிக் காண்பிக்காமல் இருக்கமுடியவில்லை........மன் னிக்க வேண்டும்.

[பணிகிறான்.]

ஹுமாயூன் : சேனுதிபதி, நீ இவ்வளவு பெரிய முட்டாள் என்று நான் இதுவரை அறியவில்லை. கருணவதியை நான் பார்த்ததுகூடக் கிடையாது. அவள் தன் தோழி மூலம் எனக்குக் கங்கணம் அனுப்பினுள். என் தந்தை தன் கணவனுக்குச் செய்த தீங்கையும் கருதாமல் அவள் என்னைத் தன் சகோதரனுகவும், ஆபத்தில் உதவும் வீரனுகவும் கோரினுள். நான் உடனே ஏற்றுக் கொண்டேன். என் மீது அவள் கொண்டிருக்கிற நம்பிக்கைக்குப் பாத்திரமாக வேண்டாமா ?

சேனுதிபதி : அதே சமயத்தில் உங்கள் நிலைமையையும் யோசித்துப் பார்க்கவேண்டும். வங்காளத்துப் போரிலே முதல் முறை அபஜயம் அடைந்தோம். இப்பொழுது நமது படையெல்லாவற்றையும் திரட்டிக்கொண்டு வந்ததால் வெற்றி கிடைக்கக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. இம்முறை தோற்றுல் இந்தியாவில் உங்களுக்கு ராஜ்யம் கிடையாது. தங்கள் மனைவி ஹமீதா பேகம் டெல்லியிலே தனித்திருக்கிருள். அவளைக் காப்பாற்றக் கூட முடியாமல் போய்விடும்.

ஹுமாயூன் : (யோசனையோடு) ஹமீதாவைப்பற்றித் தான் சிறிது கவலையாக இருக்கிறது. அவளைச் சித்தூருக்கு அருகில் நான் முகாமிடும் இடத்திற்கு அழைத்து வர உடனே ஏற்பாடு செய். அவள் கர்ப்பவதியாக இருக்கிருள் என்பது உனக்குத் தெரியும் என்று நினைக்கிறேன். ஒரு வேளை இங்கே நீ தோல்வி அடைய நேரிட்டாலும் ஹமீதா என்னுடன் இருப்பதுதான் நல்லது.

சேனுதிபதி : பாதுஷா, இவ்வளவு பிரயத்தனம் செய்து கிடைத்த வெற்றியை உதறித் தள்ளலாமா? தங்கள் மனைவியின் கர்ப்பத்திலுள்ள உங்கள் குழந்தை இந்தத் தேசத்திற்கு ஏக சக்கரவர்த்தியாக விளங்கவேண்டாமா?

ஹுமாயூன் : எனக்கு இப்பொழுது ராஜ்யம் பெரிதாகத் தோன்றவில்லை. நான் கொடுத்த வாக்கைக் காப்பாற்றவேண்டும். தேசத்தை இழந்தால் மறுபடியும் முயன்று அதை மீட்கலாம். ஆனால் வாக்கை இழந்து விட்டால் மறுபடியும் அதைப் பெற முடியாது.

சேனாதிபதி: கங்கணத்தைப் பெற்றதால் ஆபத்தில் உதவ வேண்டுமென்று நீங்கள் புறப்படுகிறீர்கள். ஆனால் உலகம் இதை வேறு விதமாகத்தான் நினைக்கும்.

ஹுமாயூன் : சேனாதிபதி, நீ கூறுகிற காரணங்களை யெல்லாம் நான் நன்றாக அறிவேன். அவற்றை யெல்லாம் தீர ஆலோசித்துத்தான் இந்த முடிவுக்கு வந்திருக்கிறேன். இனி நான் அதை மாற்றப்போவதில்லை.

சேனாதிபதி: பாதுஷா, தங்கள் ஆக்ஞை.

ஹுமாயூன் : இங்கே வெற்றி கிடைத்தால் அது உன்னுடைய சாமர்த்தியத்தால் கிடைத்ததாகவே இருக்கும் அதை மனத்தில் வைத்துப் போரை நடத்து. தோல்வி யென்றால் எனக்கு உடனே தெரிவி. ஹமீதாவைப் பத்திரமாக எந்த ராஜ்யத்திலாவது ஒப்படைக்கவேண்டும் அல்லவா ?

சேனாதிபதி : (மிடுக்கோடும் உறுதியோடும்) என் உயிர் உள்ளவரை அந்த நிலைமை ஏற்படாமல் நான் பார்த்து காக்க முயல்வேன்.

ஹுமாயூன் : அதுதான் உண்மையான வீரனுக்கு லட்சணம். உன்மேல் எனக்குப் பூரண நம்பிக்கை இருக்கிறது. இருந்தாலும் நான் முன்னெச்சரிக்கையோடு இருப்பது நல்லது. சேனாதிபதி, உடனே சென்று குதிரைப் படையை அனுப்பு. நான் புறப்பட இப்பொழுதே தயார்.

**சேனாதிபதி:** பாதுஷா, ஆக்ஞை.

[வணங்கிப் புறப்படுகிறான். அலாவுதீன் யோசனை யோடு நடமாடுகிறான்.]

## காட்சி நான்கு

*இரவு 12 மணி இருக்கும். சித்தூர்க் கோட்டையின் அரச வையில் கருணாவதியும் தியோலி இளவரசனும் உரையாடிக் கொண்டிருக்கிறார்கள்.*

**பாக்ஜி:** கருணாவதி தேவி, இந்த இரண்டு நாட்களாக உங்களுடைய வீர பராக்கிரமத்தாலேயே நமது கோட்டைக்குள் பகைவன் நுழையாதபடி தடுத்து விட்டீர்கள்.

**கருணாவதி:** நான் ஒருத்தி என்ன செய்துவிட முடியும்? எல்லாம் நம் வீரர்களின் தியாகத்தால்தான் முடிந்தது.

**பாக்ஜி:** ஐந்நூறு வீரர்களை வைத்துக்கொண்டு மதிலில் ஏற்பட்ட பிளவைப் பாதுகாப்பதென்றால் சாமானியமான காரியமாகுமா அது?

**கருணாவதி:** தியோலி இளவரசே, என்னைப் புகழ்ந்தது இருக்கட்டும். நாளைக்கு என்ன செய்யலாம்? சொல்லுங்கள்.

**பாக்ஜி:** கோட்டைக்குள்ளே இப்பொழுது நூற்றைம்பது வீரர்கள்தாம் இருக்கிறார்கள். அவர்களிலும் பாதிப்பேர் காயமடைந்தவர்கள். இருந்தாலும் அவர்கள் சண்டையிடத் துடித்துக்கொண்டிருக்கிறார்கள்.

**கருணாவதி:** இன்னும் ஒரு நாளைக்கு மதிலைக் காக்க முடியுமா?

**பாக்ஜி:** சாதாரணமாக இந்த வீரர்கள் பகதூரின் பெரிய சேனைக்கு முன்னால் ஒரு மணி நேரந்தான் நிற்கமுடியும்.

உங்களுடைய தலைமையிலே வேண்டுமானால் நான்கு மணி நேரம் தாக்குப் பிடிக்கலாம்.

கருணாவதி : இன்னும் ஒரு நாளைக்குச் சமாளிக்க முடியுமானால் எனது எண்ணம் நிச்சயமாய் நிறைவேறிவிடும்.

பாக்ஜி : ஹுமாயூன் அதற்குள் வந்துவிடுவான் என்று நம்புகிறீர்களா?

[அவன் குரலில் ஐயம் தொனிக்கிறது.]

கருணாவதி : ஆமாம். அதில் உங்களுக்குச் சந்தேகமே வேண்டாம்.

பாக்ஜி : தேவி, உங்கள் நம்பிக்கையைக் குலைக்க எனக்கு விருப்பம் இல்லை. ஆனால் நாளைக்கு உச்சி வேளை வரையில் கூட நாம் சமாளிக்க முடியாதே?

கருணாவதி : ஒன்றிரண்டு நாட்களுக்கு முன்னாலேயே கடிதம் அனுப்ப முடியாமல் போய்விட்டது. அதனால் என்னுடைய நம்பிக்கை உண்மையாவதையும் நான் காணமுடியவில்லை. இளவரசே, இனி அதை எண்ணுவதில் பயன் ஏது? நாளைக்கு நீங்கள் தலைமை பூண்டு போர் செய்ய வேண்டும். உமது கடமையைச் செய்ய வேண்டிய சமயம் வந்துவிட்டது.

பாக்ஜி : அதற்குத்தான் காத்துக் கொண்டிருக்கிறேன்

கருணாவதி : நாளைக்கு நம் வீரர்கள் குங்கும உடை தரித்துக் கோட்டை வாசலைத் திறந்துகொண்டு எதிரிகளின் மேல் பாயவேண்டும். பெண்களெல்லாம் தீப்பாயத் தயாராய் இருக்கிறார்கள்.

பாக்ஜி : கருணாவதி தேவி, கடைசி மூச்சு உள்ளவரை பகைவர்களின் தலைகள் ஆயிரம் ஆயிரமாய் நம் கோட்டைக்கு முன்னால் உருளச் செய்வேன். கடைசி வரை

யில் உங்களுக்கும் சித்தூருக்கும் சேவை செய்யும் பாக்கியம் எனக்குக் கிடைத்ததை எண்ணி உள்ளம் பூரிக்கிறேன்.

[எழுந்து வணங்கிப் பெருமிதத் தோடு நிற்கிறான்.]

கருணாவதி : இளவரசே, உமக்கு எனது மனமார்ந்த நன்றி. காலைக்கு அந்தப் பகதூர் கோட்டைக்குள் நுழைவானானால் இங்கு ஓர் உயிர்ப்பிராணியையும் பார்க்க மாட்டான்.

## காட்சி ஐந்து

மாலை நேரம். குதிரைப் படை தங்கியிருக்கும் முகாம். ஹுமாயூன் ஒரு கூடாரத்தில் அமர்ந்திருக்கிறான். அவன் முகத்தில் களையில்லை. அந்தச் சமயத்தில் சேனாதிபதி உடம்பில் பல கட்டுகளுடன் மெதுவாக உள்ளே நுழைந்து வணங்குகிறான்.

ஹுமாயூன் : யார், சேனாதிபதியா? இங்கே எப்படி வந்தாய்?

சேனாதிபதி : அங்கேயே என் உயிர் போகவில்லையே என்றுதான் வருந்துகிறேன்.

ஹுமாயூன் : நேற்றுவரை நடந்ததெல்லாம் எனக்குத் தெரிந்தது. கடைசியாக நீ கொண்டு வரும் சேதி என்ன?

சேனாதிபதி : ஒன்றும் சொல்லக்கூடியதாயில்லை. எல்லாம் தோல்விதான். நமது குதிரைப் படை மட்டும் அங்கேயே இருந்திருந்தால்........!

[சோர்வால் ஆசனத்தில் சாய்கிறான்.]

ஹுமாயூன் : அது இருக்கட்டும், சேனாதிபதி, எனக்கு ராஜ்யம் போனதுபற்றி வருத்தமே இல்லை

சேனாதிபதி : உங்கள் ராஜ்யத்தைப் பாதுகாக்கத் திறமையில்லாத நான் என்ன சேனாதிபதி? என்னை இப்பொழுதே சிரச்சேதம் செய்துவிடுங்கள்.

ஹுமாயூன் : சேனாதிபதி, உன்மேல் தவறொன்றும் இல்லை. உண்மையில் நீ யுத்த களத்திலேயே உயிர் விட்டிருப்பாய். உன் உடம்பில் உள்ள காயங்களே அதற்குச் சாட்சி கூறுகின்றன.

சேனாதிபதி : அந்தக் காயங்களிலிருந்து அதிகமாக ரத்தம் பெருகி ஓடியதால் என் உடம்பு தளர்ந்துவிட்டது. அப்படியே மூர்ச்சையாய் விழுந்துவிட்டேன். என்னை அங்கேயே சாகவிடாமல் சில வீரர்கள் தூக்கிக்கொண்டு வந்து விட்டார்கள்.

ஹுமாயூன் : நல்ல காரியம் செய்தார்கள். உன்னுடைய சேவை எனக்கு இன்னும் வேண்டுமல்லவா?

சேனாதிபதி : இங்கே நடந்த விவரம் ஒன்றும் தெரியவில்லையே?

ஹுமாயூன் : அதுதான் எனக்கு வருத்தமாக இருக்கிறது. பகதூரை நம் வீரர்கள் விரட்டியடித்து விட்டார்கள். இப்பொழுது விக்ரமஜித் தான் சித்தூருக்குப் பழையபடி ராஜாவாக இருக்கிறார்.

சேனாதிபதி : பிறகு இதிலென்ன வருத்தம்? இதற்காகத்தானே உங்கள் ராஜ்யத்தையும் உதறித் தள்ளிவிட்டு வந்தீர்கள்?

ஹுமாயூன் : நான் ஒரு நாளுக்கு முன்னதாகவே வந்திருக்கவேண்டும். வந்து சேருவதற்குள் நிலைமை மிஞ்சிவிட்டதால் ராணி கருணைவதியாய் தீப்பாய்ந்துவிட்டாள்.

சேனாதிபதி : ராணியை நீங்கள் பார்க்கவில்லையா?

ஹுமாயூன் : (விசனத்தோடு) அவளைப் பார்க்கவேண்டு மென்ற ஆசை யில்லை எனக்கு. கங்கணத்தைப் பெற்ற நான் என்னுடைய வாக்கைக் காப்பாற்றினேன் என்று அவளுக்குக் காண்பிக்க முடியவில்லையே என்றுதான் வருந்துகிறேன்.

சேனாதிபதி : ராணியாய் முன்பே உங்களுக்குக் கடிதம் அனுப்பியிருக்க வேண்டும்.

ஹுமாயூன் : (நடந்துகொண்டே) அதுதான் எனக்கு விளங்கவில்லை. ஏன் இவ்வளவு நெருக்கடி வரும்வரை என் உதவியை நாடவில்லை என்பது மர்மமாக இருக்கிறது. கொடுத்த வாக்கைக் காப்பாற்றுவேன் என்ற நம்பிக்கை கடைசி வரையில் உண்டாகவில்லை போலிருக்கிறது.

சேனாதிபதி : இதற்காகவா நீங்கள் ராஜ்யத்தை இழந்தீர்கள்?

ஹுமாயூன் : (உறுதியோடு) அது போனால் போகிறது. இந்த உடம்பிலே உயிரும், இந்தக் கையிலே வாளும் இருக்கிறவரையில் இந்த ராஜ்யம் நினைத்தால் வரும். ஆனால் என் சகோதரி கருணாவதியின் உயிரை மீட்க முடியுமா? அவளுடைய ஆன்மாவாவது நான் கங்கணப் பரிசுக்குத் துரோகம் செய்யவில்லை யென்று அறிந்து கொண்டால் எனக்குச் சந்தோஷமா யிருக்கும்.

திரை

# புடமிட்ட பொன்

நாகரிகமான ஒரு மாளிகையில் ஒரு விசாலமான அறை. சிற்றுண்டி அருந்துவதற்கு உபயோகிக்கும் மேஜை மத்தியிலே இருக்கின்றது. சுற்றிலும் நாற்காலிகள் போடப்பட்டுள்ளன. மாலை நேரம். லக்ஷ்மி நாற்காலியில் உற்சாகம் இல்லாமல் சிந்தனையோடு அமர்ந்திருக்கிறாள். அவளுக்கு முப்பத்திரண்டு வயசானாலும் பார்வைக்கு இளம் பெண் போலவே தோன்றுகிறாள். அவளுடைய ஒரே மகளான லலிதா மேஜையின் மேல் சாய்ந்துகொண்டு தாயுடன் பேசிக்கொண்டிருக்கிறாள். அவள் தாராளமாகப் பயமின்றிப் பேசுவதிலிருந்து செல்வமாக வளரும் ஒரே குழந்தை என்பதை அறியலாம். அவளுக்குப் பதினான்கு வயதிருக்கலாம். பாவாடை உடுத்து மேலே தாவணி அணிந்திருக்கிறாள். தாயைப் போலவே நல்ல அழகி. அவளுடைய அகன்ற கண்களிலே ஒரு பரபரப்புக் காணப்படுகிறது.

**லலிதா :** அம்மா, மேஜையின் மேல் புஷ்பக் கிண்ணங்கள் வைத்து அலங்கரிக்க வேண்டாமா? தேநீர் அருந்தும் நேரம் வந்துவிட்டதே?

**லக்ஷ்மி :** நேரமானால் ஆகிறது; தினமும் மேஜையை அலங்காரம் செய்கிறோமா என்ன? இன்று மட்டும் எதற்காக?

**லலிதா :** அப்பாவுக்குத்தான் அதைப்பற்றி யெல்லாம் கவலையே கிடையாது. அவர் எதையாவது சிந்தனை செய்துகொண்டே சாப்பிட்டு விட்டுப் போய்விடுவார். எது எப்படிக் கிடந்தாலும் அவருக்குத் தெரியாது. ஆனால் இன்று அந்த நடிகர் மிஸ்டர் மோகன் வருகிறாரே; அவருக்கு இப்படி இருந்தால் பிடிக்குமா?

லக்ஷ்மி : அவருக்குப் பிடிக்காவிட்டால் போகிறது. அப்பா இஷ்டப்படாததை நாம் ஏன் இன்று புதிதாகச் செய்யவேண்டும்?

லலிதா : இருந்தாலும் ஒரு விருந்தாளி வரும்போது எல்லாம் அழகாக இருக்கவேண்டாமா?

லக்ஷ்மி : உனக்குத்தான் அந்த விருந்தாளியைப்பற்றியே நினைப்பு. யார் அவரை இங்கே அழைத்தார்கள்? தாமாகவே வருகிறவருக்கு இது போதும்.

லலிதா : அம்மா, மேஜையின்மேல் விரிப்பை விரித்துப் புஷ்பங்களை வைக்கட்டுமா?

லக்ஷ்மி : (விருப்பம் இல்லாமல்) என்னவோ உன் இஷ்டம் போல் செய்.

லலிதா : (விரிப்பை விரித்துக்கொண்டே) ஏன் அம்மா, அப்பாவுக்குப் பிரியமில்லாததைச் செய்யவேண்டா மென்றாயே; அப்போது... அப்பாவுக்குப் பிரியமானதை யெல்லாம் நீ செய்வாயா?

லக்ஷ்மி : ஆமாம், நிச்சயமாகச் செய்வேன். அதில் என்ன சந்தேகம்?

லலிதா : அப்படியானால் நான் மிஸ்டர் மோகனிடம் சென்று அபிநயம் பழகிக்கொள்வதை அப்பா விரும்பு கிறாரே; நீ ஏன் வேண்டாமென்கிறாய்?

லக்ஷ்மி : (சட்டென்று) அது வேறு விஷயம், லலிதா.

லலிதா : ஆமாம்; உனக்கு இஷ்டம் இல்லாவிட்டால் அது வேறு விஷயமாகிவிடும்!

லக்ஷ்மி : உனக்குச் சதா இதே பேச்சுத்தான். உன்னை நாட்டியம் பழகவிட்டதே தப்பென்று தெரிகிறது.

லலிதா : நீ மட்டும் கல்யாணமாகிற வரைக்கும் பழகிக் கொண்டிருந்தாயாமே?

லக்ஷ்மி : ஆமாம். அப்படிப் பழகியதால்தான் அது பயனற்றதென்று தெரிந்து வேண்டாமென்கிறேன்.

லலிதா : நாட்டியம் பயனற்றதா அம்மா? அதைப் பழகுவதால் உடம்பில் ஒரு லாகவம் ஏற்படும் என்று சொல்லுகிறார்களே?

லக்ஷ்மி : பள்ளிக்கூடத்தில் நாட்டியம் பயிலுவதே போதும்.

லலிதா : (மலர்களை அணிபெற வைத்துக்கொண்டே) நாட்டியம் ஓர் அற்புதமான கலையல்லவா? சிவபிரானே மகிழ்ந்து ஆடும்படியான.........

லக்ஷ்மி : சரி சரி. இந்த வாதங்களெல்லாம் எனக்குத் தெரியும். அப்பா கொடுக்கும் செல்லம் உன்னை இப்படியெல்லாம் பேசச் சொல்லுகிறது.

லலிதா : அப்பா என்னைத் தவறான காரியம் செய்யும்படியாகவா சொல்லுகிறார்?

லக்ஷ்மி : அவர் என்னவேண்டுமானாலும் சொல்லுவார்; இந்த உலகத்திலே பெண்களுக்குப் பூரண சுதந்தரம் கொடுப்பவர் அவர் ஒருவர்தானே?

லலிதா : உனக்குந்தானே கொடுக்கிறார்?

லக்ஷ்மி : ஆமாம், கொடுத்து என்ன செய்வது? தாய்க்கு அடங்காத பிள்ளையாக உன்னைச் செய்துவிடுகிறார்.

லலிதா : ஆமாம், நான் உன் வார்த்தையை மீறி என்ன செய்துவிட்டேன்? மிஸ்டர் மோகன் இந்த ஊரில் இருக்கும் வரை சாவகாசப்பட்ட சில மாலை வேளைகளில் அவரிடம் சென்று சில பாடல்களுக்கு அபிநயம் பிடித்துப் பழகிக்கொள்ள உன்னை அநுமதிதானே கேட்கிறேன்? உன்னை மீறி ஓடிப் போகவில்லையே?

லக்ஷ்மி : அதுதான் வேண்டாமென்கிறேனே, லலிதா.

லலிதா : அம்மா, ஏன் இப்படிப் பிடிவாதமாகப் பேசுகிறாய்? நாட்டியக் கலையின்மேலுள்ள ஆசையால்தான்

உன்னைக் கெஞ்சிக் கேட்கிறேன். அதிலும் மிஸ்டர் மோகன் உனக்கு நன்றாகத் தெரிந்தவர். உனக்கே அவர் குருவாக இருந்து நாட்டியம் கற்றுக்கொடுக்க வில்லையா? அவரிடம் சிலவற்றைக் கற்றுக்கொள்ள வேண்டுமென்று எனக்கு மிகவும் ஆசையாக இருக் கிறது.

[தாயின் அருகே வந்து நிற் கிறாள்.]

லக்ஷ்மி : அவரைப் போய்ப் பார்க்க உன்னை விட்டதே தவறாக முடிந்துவிட்டது.......

லலிதா : அப்பா தான் போகும்படி........

[கதவை மெதுவாகத் தட்டும் சப்தம்.]

லக்ஷ்மி : லலிதா, மோகன் வந்து விட்டார்போல் இருக் கிறது. போய் அழைத்து வா.

லலிதா : (விரைந்து சென்று கதவைத் திறந்து) வாருங் கள், மிஸ்டர் மோகன்.

[மோகன் உள்ளே நுழை கிறான். அவனுக்கு வயசு நாற்பது இருக்கும். நடை உடை பாவனை அவனை நடி கன் என்று காட்டுகின்றன.]

மோகன் : குட்மார்னிங்! லலிதா; எங்கே உன் தாயார்? ஓ! குட்மார்னிங் லக்ஷ்மி.

லக்ஷ்மி : வாருங்கள், மிஸ்டர் மோகன். சீக்கிரமாகவே வந்துவிட்டீர்களே!

மோகன் : ஏன், நான் வரக்கூடாதா என்ன? இந்த நகரத் துக்கு வந்தது முதல் இங்கு வரவேண்டுமென்று எனக்கு

ஒரே ஆவல். இன்றுதான் சற்று அவகாசம் கிடைத்தது. வந்தேன்....அன்றைக்கு லலிதா என்னைப் பார்க்க வந்திருந்தபோது, ஒரு பாட்டுப் பாடினாள். மிக அழகாக இருந்தது. ரொம்ப நன்றாகப் பாடுகிறாள்.

லக்ஷ்மி : (உற்சாகமில்லாமல்) நன்றாகத்தான் பாடுகிறாள். ........ம்........உங்கள் நாடகங்களை ஜனங்கள் வெகுவாகப் புகழ்ந்து பேசுகிறார்களே!

மோகன் : நீ ஏன் வந்து பார்க்கவில்லை? ஒவ்வொரு நாடகத்திற்கும் உன்னை எதிர் பார்த்துக்கொண்டிருக்கிறேன்.

லக்ஷ்மி : எங்களுக்கு எங்கே ஒழிகிறது? தினமும் ஏதாவது........

மோகன் : லக்ஷ்மி, ஏன் இப்படி வீண் சாக்குப்போக்குச் சொல்லப் பார்க்கிறாய்? உன் கணவர் புரொபசர் மாதவனுக்கு நாடகம் பார்ப்பது பிடிக்கவில்லை என்று சொல்லேன்!

லக்ஷ்மி : அவருக்குப் பிடிக்காமல் என்ன? நேரம் இல்லாததால்தான் வரவில்லை.

மோகன் அவருக்கு ஏது நேரம்? எப்பொழுது பார்த்தாலும் ஏதாவது ஆராய்ச்சியில் மூழ்கியிருப்பார். அப்படித்தானே?

லக்ஷ்மி : அவருக்கு அதிலே பிரியம்.

மோகன் : பிரியமாயிருந்தால் மற்றவர்களுடைய சந்தோஷத்தையும் கவனிக்க வேண்டாமா?

லக்ஷ்மி : அவருக்கு உதவியாக இருந்து காரியம் செய்வதுதான் எனக்கும் சந்தோஷம்.

மோகன் : ஓகோ, லக்ஷ்மி, இப்போது நீ உலகத்தையே வெறுத்துவிட்டாய் போல் இருக்கிறது.

லக்ஷ்மி : லலிதா, போய் அப்பாவை அழைத்து வா. சிற்றுண்டி அருந்த நேரமாகிறது.

லலிதா : மிஸ்டர் மோகன், இதோ ஒரு நிமிஷத்தில் வந்துவிடுகிறேன்.

[போகிறுள்.]

மோகன் : லக்ஷ்மி, மாதவன் எங்கே?

லக்ஷ்மி : அவர் பூங்காவிற்கு உலாவச் சென்றிருக்கிறார்.

மோகன் : நான் வருவது அவருக்குத் தெரியுமல்லவா?

லக்ஷ்மி : தெரியாமல் என்ன? நன்ருகத்தெரியும். நீங்கள் ஐந்தரை மணிக்கு வருவதாக எழுதியிருந்தீர்கள். அவர் வழக்கமாக காலரை மணிக்கு உலாவப் போய்விடுவார். நீங்கள் வந்ததும் லலிதாவை அனுப்பும்படி சொல்லி யிருக்கிறார்.

மோகன் : என்னை இங்கு வரும்படி அழைப்புக்கூட வர வில்லையே!

லக்ஷ்மி : அழைக்கலாமென்று....

மோகன் : லக்ஷ்மி, உன்னைப் பார்த்துப் பல வருஷங்கள் ஆகின்றன.

லக்ஷ்மி : ஆமாம்.......ம்...உங்கள் கம்பெனி இன்னும் எவ்வளவு காலம் இந்த ஊரில் இருக்கும்?

மோகன் : விரைவிலே நாங்கள் இந்த நகரத்தை விட்டுப் புறப்படவேண்டியிருக்கிறது. ஆறு மாதம் இங்கே தங்கலாமென்றுதான் வந்தேன். ஆனால் நாடகக் கொட்டகையை இரண்டு மாதங்களுக்கு மேல் பெற முடியவில்லை. அதனால் இன்னும் இரண்டு மூன்று வாரத்தில் புறப்பட்டாக வேண்டும். அதற்கு முன்னால் லலிதாவை அனுப்புவது பற்றிக் கேட்கலாமென்று வந்தேன். நீ என்ன முடிவு செய்திருக்கிறாய்?

லக்ஷ்மி : (சற்று நிதானித்து) ம்........இன்னும் ஒரு முடிவும் செய்யவில்லை.

மோகன் : புரொபசர் என்ன சொல்லுகிறார்? அவருக்குச் சம்மதந்தானே?

லக்ஷ்மி : அவருக்குச் சம்மதமென்றுதான் சொல்லுகிறார்.

மோகன் : பிறகு என்ன? இன்றிருந்தே அவளை என்னிடம் வரச்சொல்.

லக்ஷ்மி : (இழுத்தாற்போல்) பார்க்கலாம்.

[ஜன்னலருகில் சென்று வெளியே பார்க்கிறாள்.]

மோகன் : என்ன யோசிக்கிறாய் லக்ஷ்மி? உனக்கு இஷ்டம் இல்லையா?

லக்ஷ்மி: (திரும்பி) எனக்கு இஷ்டம் இல்லைதான்.

மோகன்: என்ன! உனக்கு இஷ்டமில்லையா? நீ சொல்வது அதிசயமாக இருக்கிறதே!

லக்ஷ்மி : அவள் நாட்டியம் பழகுவதையே நிறுத்திவிடலாமென்றிருக்கிறேன்!

மோகன் : ஓகோ, நீ அப்படியா நினைத்துக்கொண்டிருக்கிறாய்? லலிதா மட்டும் நாட்டியம் நன்கு பழகினாளானால் அவளுக்கு இணையாக யார் இருக்க முடியும்? அவள் அழகுக்கும், சாயலுக்கும், பாட்டிற்கும்........

லக்ஷ்மி : என்ன இருந்தாலும் எனக்கு அதில் இஷ்டம் இல்லை.

மோகன் : (அருகில் சென்று) லக்ஷ்மி, நான் கண்டிப்பாய்ச் சொல்லுகிறேன். லலிதாவை நீ அனுப்பியே ஆகவேண்டும்.

லக்ஷ்மி : எனக்குக் கொஞ்சங்கூட விருப்பம் இல்லை.

[மேஜையருகில் வருகிறாள்.]

மோகன் : அதனாலே...?

லக்ஷ்மி : அதனால் அனுப்ப முடியாது.

மோகன் : முடியாதா? நன்றாக யோசனை செய்து பதில் சொல்.

லக்ஷ்மி : யோசனை செய்துதான் சொல்லுகிறேன்.

மோகன் : நீ இப்படிப் பேசுவது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறதே! உனது கலையார்வமெல்லாம் மறைந்து விட்டதா?

லக்ஷ்மி : அந்தக் கலையை நினைக்கவே எனக்கு இப் பொழுது வெறுப்பாயிருக்கிறது.

மோகன் : நான் லலிதாவை வரும்படி ஏற்பாடு செய்து விட்டால் நீ என்ன செய்வாய்? அவள் ஒரே ஆவலாக இருக்கிறாள்.

லக்ஷ்மி : நீங்கள் எப்படி ஏற்பாடு செய்ய முடியும்?

மோகன் : ஏன்? எனக்கு உரிமை இல்லையா? அவள்........ அவள் என் சிஷ்யையின் மகள்தானே?

லக்ஷ்மி : உரிமையா? ஏது உரிமை?

மோகன் : அவள் உன் மகள் என்றால், எனக்கும் ஒரு வகையில் மகள்தானே?

லக்ஷ்மி (கோபமாக) சீ! அற்பத் தனமாகப் பேசாதே.

மோகன் : சரி....அது கிடக்கட்டும். நீ அனுப்புவாயா, மாட்டாயா?

லக்ஷ்மி : மாட்டேன் என்றுதான் சொல்லுகிறேனே?

மோகன் : லக்ஷ்மி, ஏன் இப்படி யெல்லாம் வெறுப் போடு பேசுகிறாய்? என்னை நீ மறந்து விட்டாயா? உனது காதலெல்லாம் என்ன வாயிற்று?

லக்ஷ்மி : காதலா? அதைக் காதல் என்று சொல்வது? கலைப் பைத்தியம் அல்லவா அது?

மோகன் : லக்ஷ்மி, லலிதாவை இணையற்ற நாட்டிய ராணி யாகச் செய்ய என்னால் முடியும். அதைச் செய்ய நான் ஒரே ஆவலாக இருக்கிறேன்.

லக்ஷ்மி: (வெறுப்போடு) போதும், போதும் உங்கள் ஆவல் உணர்ச்சியெல்லாம்....! மேலும் எங்கள் மகள் அவள். அவளைப்பற்றி உங்களுக்குக் கவலை வேண்டாம்.

மோகன்: ஏன் இப்படி என் மனத்தைப் புண் படுத்துகிறாய்?

லக்ஷ்மி: தீராத புண்ணை என் நெஞ்சில் ஏற்படுத்தியவருக்கு இந்தக் கேள்வி கேட்க நா இருக்கிறதா?

[அவள் முகத்தில் கோபக் கனல் பாய்கிறது.]

மோகன்: நீ இணங்கா விட்டால் பின்னால் அதற்காக வருந்தப் போகிறாய்.

லக்ஷ்மி: அப்பொழுது நீங்கள் எனக்குத் தேறுதல் சொல்ல வரவேண்டியதில்லை.

மோகன்: லலிதா என்னிடம் வருவதை நீ எப்படித் தடுப்பாயோ, பார்க்கலாம். மாதவன் சம்மதம் தருவார்.

லக்ஷ்மி: (கோபமாக) 'நீ ஒரு துஷ்டன். பெண்களை மயக்குபவன்' என்று அவரிடம் சொல்லித் தடுப்பேன்.

மோகன்: ஆமாம். அப்படிச் சொல்லி நாடிய உனக்குப் பழி தேடப்போகிறாயா?

லக்ஷ்மி: எனக்குப் பழி வந்தால் வரட்டும்; என் மகள் உன்னுடன் பழகச் சம்மதிக்க மாட்டேன்.

[கதவைத் தட்டும் சப்தம்.]

மோகன்: ஹலோ, மாதவன்!

லக்ஷ்மி: லலிதா, அப்பாவை அழைத்து வந்து விட்டாயா? ஏன் இவ்வளவு நேரம்?

[லலிதாவும் அவள் தந்தை புரொபசர் மாதவனும் உள்ளே நுழைகிறார்கள். மாதவனுக்கு நாற்பது வயசு இருக்கும்.]

மாதவன் : வாருங்கள் மோகன். உங்களைப் பார்த்துப் பல வருஷங்கள் ஆகின்றன. நீங்கள் வந்து ரொம்ப நாழிகை யாகிறதோ? வாருங்கள், சாப்பிட்டுக்கொண்டே பேசுவோம்....லலிதா, சிற்றுண்டி எடுத்து வை.

[லலிதா பரிமாறுகிறாள்.]

மோகன் : பார்த்து ரொம்ப காலம் ஆகிறது. உங்கள் கல்யாணத்திற்குப் பிறகு ஒரு முறையோ இரண்டு முறையோதான் சந்திக்க முடிந்தது. மாதவன், உங்கள் ஆராய்ச்சிகளெல்லாம் இன்னும் நடக்கின்றன அல்லவா? இப்பொழுது என்ன ஆராய்ச்சி செய்கிறீர்கள்?

மாதவன் : இப்பொழுதா? அந்தரங்க உள்ளத்தைப் பற்றிப் புதியதோர் அபிப்பிராயம் எனக்கு ஏற்பட்டிருக்கிறது. அதைப்பற்றி மேற்கொண்டு சோதனைகள் செய்து வருகிறேன்.....ம்.....அது இருக்கட்டும். உங்கள் விஷயத்தைப் பேசலாம். உங்கள் நாடகங்கள் எல்லாம் மிக நன்றாக இருப்பதாகக் கேள்விப்பட்டேன்.

மோகன் : நீங்கள் கேள்விதான் படுவீர்கள். நீங்களே பார்த்து அபிப்பிராயம் சொன்னால்தானே எனக்கு சந்தோஷமாக இருக்கும்?

மாதவன் : அதெற்கென்ன, வருகிறேன்.

மோகன் : இப்பொழுது சொல்லுவீர்கள். பிறகு உங்களுக்கு ஞாபகமே இருக்காது.

மாதவன் : இல்லை. இல்லை. அவசியம் வருகிறேன். லலிதா, நீ எனக்கு ஞாபகப் படுத்து. நான் ஒரு நாளைக்கு நிச்சயமாக வருகிறேன்.

லலிதா : (பரிமாறிக்கொண்டே) ஆகட்டும் அப்பா. மிஸ்டர் மோகன் நடிக்கும் 'வீர தாண்டவம்' என்ற நாடகம் மிக நன்றாக இருக்கிறதாம்.

மாதவன் : அப்படியா? அதையே பார்க்கலாம்.

மோகன்: நாளைக்கும் அந்த நாடகம் நடக்கிறது.

மாதவன்: சரி. அவசியம் நாளைக்கே வருகிறேன் லக்ஷ்மி, போகலாமா?

லக்ஷ்மி: லலிதா, இந்தா............இந்தப் பலகாரத்தை எல்லோருக்கும் வை.

மோகன்: மாதவன், லலிதாவையும் அழைத்துக்கொண்டு வாருங்கள். முன் வரிசையில் எல்லோருக்கும் ரிஸர்வ் செய்யச் சொல்லுகிறேன். அந்த நாடகத்தில் வசந்த மாதவியின் நாட்டியத்தை லலிதா அவசியம் பார்க்க வேண்டும்.

லலிதா: வசந்த மாதவியா? யார் அது?

மோகன்: அவள் புதிதாக என்னிடம் நாட்டியம் பழக வந்திருக்கிறாள். உன்னுடைய 'கிளாஸ் மேட்' என்று சொன்னாளே?

லலிதா: அவளா? அவள் என் சிநேகிதி அல்லவா?

மோகன்: அப்படியா? அப்போது நீ அவசியம் அவளுடைய நடனத்தைப் பார்க்க வேண்டும். ம்........மாதவன், லலிதா சில பாடல்களுக்கு என்னிடம் அபிநயம் பழகிக் கொள்ள விரும்புகிறாளே, நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

மாதவன்: எனக்குச் சம்மதந்தான்.

மோகன்: அப்படியானால் அவளைத் தினமும் மாலை வேளையில் அனுப்புகிறீர்களா?

மாதவன்: அவளுக்கும் லக்ஷ்மிக்கும் சம்மதம் என்றால் அப்படியே செய்யலாம்........என்ன லக்ஷ்மி?

லக்ஷ்மி: பார்க்கலாம்; இப்பொழுது என்ன அவசரம்?

மாதவன்: என்ன அவசரமா? மோகன் எப்பொழுதும் இங்கு இருப்பாரா?

லக்ஷ்மி: இல்லாவிட்டால் போகிறது.

மாதவன்: மோகன், பார்த்தீர்களா, உங்கள் சிஷ்யை இப்பொழுது எப்படிப் பேசுகிறாள் என்று?

மோகன்: நீங்கள் அவசியம் அனுப்ப வேண்டும் என்றால் அவள் பேசாமல் ஒப்புக் கொள்ளுகிறாள். லலிதா வுக்கு மிகுந்த ஆசை.

மாதவன்: இருந்தாலும் தாய்க்குள்ள உரிமையை நான் பறித்துக் கொள்ள முடியுமா?

மோகன்: லலிதா இஷ்டப்படும் போது அவளுடைய ஆசையையும் கவனிக்க வேண்டும் அல்லவா?

லக்ஷ்மி: (சட்டென்று) அவள் இஷ்டப் பட்டதை யெல் லாம் செய்யும்படி விட முடியுமா? அவளுக்கு என்ன தெரியும்?

லலிதா: (லக்ஷ்மி அருகில் வந்து நின்று) இதில் என்ன தவறு இருக்கிறது அம்மா? தவறு இருந்தால் அப்பா சம்மதிப்பாரா?

லக்ஷ்மி: அப்பாவுக்கு என்ன? அவர் எதற்கும் சம்மதிப் பார்.

மாதவன்: என்ன லக்ஷ்மி, என்மீது ஏதோ குற்றம் சுமத்தப் பார்க்கிறாயே! நாட்டியம் ஒரு நல்ல கலை; அதை நீயே அறிந்திருக்கிறாய். உன்னுடைய குருவி னிடமே உன் மகளும் சிலவற்றைக் கற்றுக் கொள்ளட்டும் என்றுதானே சொல்லுகிறேன்? அதில் என்ன தவறு?

மோகன்: அப்படிச் சொல்லுங்கள். அதுதான் சரி.

லக்ஷ்மி: (உறுதியாக) நீங்கள் என்ன சொன்னாலும் சரி. எனக்குக் கொஞ்சங் கூடச் சம்மதம் இல்லை.

[வேலைக்காரன் கதவருகே வந்து நிற்கிறான்.]

லலிதா: (திரும்பிப் பார்த்து) என்ன முனிசாமி?

லக்ஷ்மி : யார் முனிசாமியா ? வா இப்படி. என்ன சங்கதி ?

முனிசாமி : யாரோ ஓர் அம்மா வந்திருக்கிறார்கள். இளவயசு அம்மா; நம் சின்ன அம்மாவைப் பார்க்க வேணுமாம் அவசரமாக.

லக்ஷ்மி : உள்ளே அழைத்துவாயேன்.

முனிசாமி : நான் உள்ளே வரச்சொன்னேன். அவர்கள் வர மாட்டேன் என்று சொன்னார்கள். தனியாகப் பார்க்க வேணுமாம்.

மாதவன் : யார் என்று பேர் கேட்டாயா ?

முனிசாமி : வசந்தமாதவியாம்; சின்னம்மா கூடப் படித்தவர்களாம்.

மோகன் : (திடுக்கிட்டு) யார், வசந்த மாதவியா ?

மாதவன் : லலிதா, நீ போய்ப் பார்த்துவிட்டு வா.

லக்ஷ்மி : முடியுமானால் உள்ளே அழைத்து வா. சிற்றுண்டி சாப்பிடும்படி சொல்.

லலிதா : மிஸ்டர் மோகன், இதோ போய்விட்டுச் சீக்கிரம் வந்துவிடுகிறேன். அதற்குள் அம்மாவிடம் பேசிப் பாருங்கள்.

[போகிறாள்.]

மோகன் : (சற்றுப் பரபரப்புடன்) மாதவன், நீங்கள் என்ன முடிவு செய்கிறீர்கள் ?

மாதவன் : லக்ஷ்மிக்குச் சம்மதம் என்றால் என்னைக் கேட்க வேண்டியதே இல்லை.

மோகன் : இந்த விஷயத்திலெல்லாம் ஆடவர்களின் தீர்மானமே முடிவாக இருக்க வேண்டும். ஆதலால் நீங்களே சொல்லுங்கள்.

லக்ஷ்மி : அவர்கள் என்ன சொன்னாலும் நான் சம்மதிக்க மாட்டேன்.

மோகன்: லலிதா என்னிடம் கற்றுக்கொள்ள வருவேன் என்ருல்?

லக்ஷ்மி: அவளும் என்னுடைய இஷ்டத்திற்கு மாருக நடக்க மாட்டாள்.

மோகன்: அவள் வரவேண்டுமென்று ஒரே உறுதியாக இருக்கிருள். அது எனக்குத் தெரியும்.

மாதவன்: அவள் வருவதாக இருந்தால் அழைத்துச் செல்லுங்கள், மோகன். நான் லக்ஷ்மிக்குச் சமாதானம் சொல்லிக் கொள்ளுகிறேன்.

லக்ஷ்மி: நீங்கள் என்ன சமாதானம் சொன்னுலும் நான் இணங்க மாட்டேன்.

மோகன்: நான் போய் லலிதாவுடன் தனியாகப் பேசுகிறேன். இங்கு அவள் வந்தால் லக்ஷ்மியின் முன்னுல் தனது விருப்பத்தைத் தெரிவிக்கத் தயங்குவாள்.

[வெளியே புறப்பட எழுகிருன்.]

மாதவன்: நீங்கள் சிற்றுண்டி சாப்பிடுங்கள். பிறகு பேசினுல் போகிறது.

மோகன்: இல்லை, இல்லை. முதலில் அதை முடித்து விடுகிறேன்.

[அவசரமாகப் போகிருன்.]

லக்ஷ்மி: மிஸ்டர் மோகன், நீங்க என் மகள் மனதைக் கெடுக்க வேண்டாம். நான் சம்மதிக்கவே மாட்டேன்.

மாதவன்: லக்ஷ்மி, ஏன் இப்படிச் சஞ்சலப்படுகிருய்? லலிதா விரும்பினுல் மோகனிடம் சென்று அபிநயம் பழகட்டுமே?

லக்ஷ்மி: எனக்கு லலிதாவை அவரிடம் அனுப்புவதில் இஷ்டமே இல்லை.

மாதவன்: ஏன்? லலிதாவின் கலை வளர்ச்சியில் அவர் இவ்வளவு ஆசை கொண்டிருக்கும்போது........

லக்ஷ்மி: அவர் ஆசை கொண்டிருந்தால் அதைப்பற்றி எனக்கு என்ன? கொஞ்சங் கூட எனக்கு இஷ்டம் இல்லை.

மாதவன்: லக்ஷ்மி, நீ ஒரு நாள் கூட என்னுடன் இத்தனை பிடிவாதமாக இருந்ததில்லையே?

லக்ஷ்மி: ஆமாம்; இருந்ததே இல்லைதான். அதனாலாவது என் இஷ்டப்படி இந்த விஷயத்தில் விட்டு விடக் கூடாதா?

மாதவன்: லக்ஷ்மி, நீ என்ன சொன்னாலும் நான் லலிதாவை அனுப்பத்தான் போகிறேன்.

லக்ஷ்மி: நீங்கள், என்ன நினைத்துக் கொண்டாலும் சரி; உயிரோடு இதற்கு நான் சம்மதிக்க மாட்டேன்.

மாதவன்: நீ வீணாய் ஏதோ எண்ணிக் கொண்டு கலக்கம் அடைகிறாய். வெளிப் படையாக விஷயத்தைச் சொல்; ஏன் இப்படி உனக்குக் கலக்கம்?

லக்ஷ்மி: (உணர்ச்சியோடு) இது வெறும் வீண் கலக்கம் அல்ல. என் குற்றத்தை உணர்ந்து அந்த வேதனையால் நான் கொண்டிருக்கிற உறுதியான தீர்மானம்.

மாதவன்: நீ ஒன்றும் தவறு செய்து விடவில்லையே, லக்ஷ்மி?

லக்ஷ்மி: நான் செய்யவிருந்த தவறு உங்களுக்குத் தெரியாது.

மாதவன்: (நிதானமாக) லக்ஷ்மி, நான் எல்லாம் தெரிந்து கொண்டுதான் இருக்கிறேன்.

லக்ஷ்மி: (திடுக்கிட்டு) என்ன, உங்களுக்குத் தெரியுமா?

மாதவன்: தெரியும். சந்தேகமாகச் சிறிது இருந்ததெல்லாம் இன்று தெளிவாகி விட்டது. அதற்காகவே லலிதாவை அனுப்ப வேண்டுமென்று வற்புறுத்திப் பேசினேன்.

லக்ஷ்மி: எல்லாம் தெரிந்து கொண்டுமா என்னை இந்த வீட்டிலே வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்?

மாதவன்: (நிதானமாக) ஆமாம், இந்த வீட்டில் மட்டு மல்ல; எனது இருதய வீட்டிலும் அதன் ராணியாக உன்னை வைத்துக் கொண்டிருக்கிறேன்.

லக்ஷ்மி: (ஏக்கத்தோடு) ஐயோ! நான் பரிசுத்தமிழந்த வள். உங்கள் முன்னால் நிற்கக்கூடத் தகுதி அற்றவள்.

மாதவன் உள்ளத்திலே நீ எப்பொழுதோ தடுமாற்றம் அடைந்திருக்கிறாய். அதை நான் கொஞ்சமும் பொருட் படுத்த வில்லை. நீ கவலைப்படாதே.

லக்ஷ்மி . உள்ளத்தில் தடுமாற்றமா? ஆமாம். அதுதான் நடந்தது. ஆனால் அதை யார் நம்பப்போகிறார்கள்?

மாதவன் : அதில் எனக்குச் சிறிதேனும் சந்தேகம் கிடையாது, லக்ஷ்மி. வேறு விபரீதம் நடந்திருந்தால் நீ இதுவரை உயிரை வைத்துக்கொண்டிருக்கமாட்டாய் என்பது எனக்குத் தெரியும்.

லக்ஷ்மி: (கவலையோடு) இருந்தாலும் நான் உங்களுக் குத் தகுதியானவளா? மனத்தால் தவறினாலும் தவறு தானே?

மாதவன் : சாஸ்திரங்கள் அப்படிச் சொல்லுகின்றன. பத்து வருஷங்களுக்கு முன் நானும் அப்படித்தான் நினைத்திருப்பேன். ஆனால் இன்று நான் அப்படி நினைப்பதில்லை. பருவத்தின் துடிப்பினாலும் கலை மயக் கத்தினாலும் நேர்ந்த ஒரு குற்றத்திற்காக ஏங்கி ஏங்கி, எத்தனை ஆயிரம் மடங்கு என் மேல் நீ அன்பு கொண்டி ருக்கிறாய் என்பதை நான் நன்கு அறிந்திருக்கிறேன்.

லக்ஷ்மி : உண்மையாக நீங்கள் என்னை மன்னித்து விட்டீர்களா?

மாதவன். கண்ணே, நீ புடமிட்டெடுத்த பசும்பொன். உன் உள்ளம் என்மேலுள்ள அன்பிலே தோய்ந்து

கிடப்பதை நான் உணர்ந்து அநுபவித்துக்கொண்டிருக்கிறேன். இதில் மன்னிப்பதற்கு என்ன இருக்கிறது?

லக்ஷ்மி: உங்கள் பெருந்தன்மையை என்னவென்று சொல்லுவேன்! அதற்குப் பாத்திரமாகும் புனிதத் தன்மை என்னிடத்தில் இல்லை. அதை நினைத்துத்தான் நான் ஏங்குகிறேன்.

[விம்மி விம்மி அழுகிறாள்.]

மாதவன்: (உணர்ச்சியோடு) இனி அதைப் பற்றிப் பேசாதே. இதுவரை நமது வாழ்க்கை அன்பு மயமாக இருந்ததென்றாலும் நாம் முற்றும் ஒன்றுபடாதிருந்தோம். உன் மனத்திலே மறைந்து கிடந்த இந்த ஒரு செய்கை நம்மைச் சற்றே பிரித்து வைத்திருந்தது. நான் உன்னிடம் கொண்டுள்ள அன்பிலே நம்பிக்கைகொண்டு அதை வெளிப்படுத்தும் தைரியம் ஒரு நாளைக்குக் கொள்வாயென்று காத்திருந்தேன். நானே கண்டுபிடித்ததாகக் கூறியிருந்தால் பிறகு நமக்குள் என்றும் சந்தேகந்தான் வளர்ந்திருக்கும். இன்று அது எப்படியோ வெளியாகிவிட்டது. இனி நமக்குள்ளே ஒருவருக்கொருவர் தெரியாதது ஒன்றும் இல்லை. நமது காதல் பூரணமடைந்துவிட்டது. நமது உள்ளம் ஒன்று; உயிரும் இனி ஒன்றுதான்.

லக்ஷ்மி: என்னைப்போலப் பாக்கியசாலி யார் இருக்கமுடியும்? நீங்கள் என் தெய்வம்.

[அவள் கண்களிலே ஆனந்தக் கண்ணீர் பொங்குகிறது. வேகமாக யாரோ வரும் சப்தம் கேட்கிறது. கதவைத் திறந்துகொண்டு லலிதா உள்ளே அவசரமாக நுழைகிறாள்.]

லலிதா: அம்மா, நான் மிஸ்டர் மோகனிடம் நாட்டியம் கற்றுக்கொள்ளப் போவதில்லை. நீ கவலைப்பட வேண்டாம்.

மாதவன்: (சற்று ஆச்சரியத்தோடு) ஏன் லலிதா?

லலிதா: என் சிநேகிதி வசந்தமாதவி என்னை எச்சரிக்கை செய்யவே வந்திருந்தாள்.

லக்ஷ்மி: (கவலையும் ஆவலும் கலந்த குரலில்) அவள் என்ன சொன்னாள்?

லலிதா: அம்மா, மிஸ்டர் மோகன் முன்புபோல் ஒழுங்காக இல்லையாம். இப்பொழுது அவருடைய நடத்தை யாருக்கும் பிடிக்கவில்லை. அதனால் வசந்த மாதவியும் உடனே விலகிவிட்டாள்.

மாதவன்: மோகன் உன்னுடன் பேசவேண்டுமென்று அவசரமாக வந்தாரே?

லலிதா: ஆமாம், வந்தார். எனக்குப் பள்ளிக்கூடத்தில் கற்றுக்கொடுக்கும் காட்டியமே போதுமென்று அவரிடம் கூறிவிட்டேன்.

மாதவன்: இப்பொழுது அவர் எங்கே?

லலிதா: நான் வரமுடியாதென்று சொன்னதும் கோபமாக வெளியே போய்விட்டார்.

மாதவன்: அடடே, தேநீர் கூடக் குடிக்காமலா?

லக்ஷ்மி: போனால் போகட்டும். லலிதா, உன் சிநேகிதி எங்கே? அவளை அழைத்து வா; நாமெல்லோரும் சாப்பிடுவோம்.

[லலிதா மறுபடியும் வெளியே போகிறாள். மாதவனும் லக்ஷ்மியும் சிற்றுண்டி அருந்த உட்காருகிறார்கள். ஆனந்தத்தால் லக்ஷ்மியின் கண்கள் மலர்ந்திருக்கின்றன. என்றும் இல்லாத ஒரு களை அவள் முகத்தில் பொங்குகிறது.]

திரை